# தர்மசக்கரம்



காளயுக்தி ஹு தை மீ    சக்கரம் 28 ஆரம் 1

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்
திருப்பராய்த்துறை-639 115 திருச்சி ஜில்லா.

# அந்தர்யோக விவரங்கள்

**மதுரை ஜில்லா—திருவேடகத்தில் 21—1—79 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: விவேகானந்த கல்லூரி
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
உணவு வசதி: நேரில் பகல் உணவிற்கு ரூ 1-00ம், மாலை சிற்றுண்டிக்கு 75 பைசாவும் செலுத்தி சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.

**சேலம் ஜில்லா—மேச்சேரியில் 21—1—79 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: சன்மார்க்க சங்கக்கட்டடம்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**வடஆற்காடு ஜில்லா—மேக்களூரில் 27—1—79 சனிக்கிழமை**

இடம்: ஸ்ரீ நவநீத கோபால கிருஷ்ண ஆலயம்
நேரம்: காலை 10-30 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**வடஆற்காடு ஜில்லா—ஆரணியில் 28—1—79 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: கோட்டை ஸ்ரீ கைலாசநாதர் ஆலயம்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**கோவை ஜில்லா—வையம்பாளையத்தில் 28—1—79 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: சுதந்திரம் உயர்நிலைப்பள்ளி
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி ஆத்மானந்தர்

**திருநெல்வேலி ஜில்லா—கோவில்பட்டியில் 28—1—79 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: ரயில்வே ஸ்டேஷனுக்கருகிலுள்ள லாயல்மில் ஆரம்பப்பாடசாலை
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்

**ராஜபாளையத்தில் 4—2—79 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: ஸ்ரீ ராமகிருஷ்ண சேவாச்ரமம்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-45 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**சேலத்தில் 11—2—79 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: ஸ்ரீ சாரதா கல்லூரியின் பிரார்த்தனை கொட்டகை
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
உணவு வசதி: நேரில் பகல் உணவுக்கு ரூ. 1-00 செலுத்தி சீட்டுப் பெற்றுக் கொள்ளலாம்.

**சென்னையில் 18—2—79 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: புரசவாக்கம் சர் M. C. T முத்தையா செட்டியார் பெண்கள் உயர்நிலைப்பள்ளி
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

# தர்ம சக்கரம்

மாத சஞ்சிகை

| சக்கரம் 28 | காளயுக்தி ௵ தை ௴ | ஆரம் 1 |
|---|---|---|

## பொருளடக்கம்



| | | | | |
|---|---|---|---|---|
| வருட சந்தா : | உள்நாடு ரூ. | 10-00 | வெளிநாடு ரூ. | 20-00 |
| தனி இதழ் | ,, ரூ. | 1-00 | ,, ரூ. | 2-00 |

ஆண்டுதோறும் சந்தா செலுத்திப் புதுப்பிப்பதற்குப் பதிலாக ரூபாய் நூறு டிபாசிட் செய்துவிட்டால் தொடர்ந்து மாதந்தோறும் பத்திரிகை வந்துகொண்டிருக்கும். பத்திரிகை வேண்டாம் என்று கருதும்பொழுது டிபாசிட் செய்த ரூபாய் நூறையும் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். டிபாசிட் முறை வெளிநாட்டுக்கு இல்லை.

## ஸ்ரீ தாயுமான சுவாமிகள் கோயில் திருப்பணி

### *1978 டிசம்பர் மாத நன்கொடை விபரம்*

| தேதி | விலாசம் | | | ரூபாய் |
|---|---|---|---|---|
| | நவம்பர் மாதம் முடிய நன்கொடை | | | *64 448-00* |
| *1–12–78* | ஸ்ரீ G. வெங்கடாசலபதி | பெருவளநல்லூர் | திருச்சி ஜில்லா | *100-00* |
| *2–12–78* | தினமலர் தினசரி பத்திரிக்கை | திருநெல்வேலி | | *501-00* |
| | ஸ்ரீ T. கோவிந்தசாமி செட்டியார் | வடக்கு ராம்பார்ட் | தஞ்சாவூர் | *101-00* |
| | ஸ்ரீ A. R. சென்னிமலை கவுண்டர் | சோமானூர் | கோவை ஜில்லா | *101-00* |
| | ஸ்ரீ C. R. ராமமூர்த்திகஸ்தூரி சன்ஸ் ஆலை | | திருப்பூர்–4 | *101-00* |
| | ஸ்ரீமதி K.R.C.P. பழனித்தாய்அம்மாள் | குகை | சேலம்–6 | *101-00* |
| | ஸ்ரீமதி K.R.C.R. சௌடம்மாள் | ,, | ,, | *101-00* |
| | ஸ்ரீ C.R. பழனிச்சாமி கவுண்டர் | சின்னியம்பாளையம் | கோவை–14 | *100-00* |
| | அருட்பெருஞ்ஜோதி மாதர் சங்கம் | குகை | சேலம்–6 | *100-00* |
| | ஸ்ரீமதி R. கிருஷ்ணம்மாள் | ,, | ,, | *100-00* |

| | | |
|---|---|---|
| 4-12-78 | தி தூத்துக்குடி ஸ்பின்னிங் மில்ஸ் லிட் தூத்துக்குடி | 1 000-00 |
| | M/s காளாக்ஷி (தூத்துக்குடி) ஏஜன்ஸீஸ் தூத்துக்குடி-1 | 500-00 |
| | M/s T. சண்முக மூப்பனார் சன்ஸ் ,, | 300-00 |
| | மாஸ்டர் S. K. கார்த்திகேயன் தூத்துக்குடி-2 | 150-00 |
| | ஸ்ரீ E. ராமகிருஷ்ணன் கீழ்பாக்கம் சென்னை-10 | 101-00 |
| | ஸ்ரீமதி சீலம்மாள் ஜெயலக்ஷ்மி சேரடி டிரஸ்ட் கோவை-18 | 101-00 |
| | ஸ்ரீ V. நடேச முதலியார் தாம்பரம் கிழக்கு சென்னை-59 | 101-00 |
| 5-12-78 | ஸ்ரீ K. வெங்கடாசலம் மகாலிங்கபுரம் பொள்ளாச்சி கோவை ஜில்லா | 250-00 |
| | ஸ்ரீ T. M. பழனிசாமி பூலுவபட்டி ,, | 201-00 |
| | ஸ்ரீ R. வெங்கடாசல செட்டியார் அவளூர்பேட்டை தென்ஆற்காடு ஜில்லா | 101-00 |
| | ஸ்ரீ P.M.S.P. சுப்பையா செட்டியார், கரூர் திருச்சி ஜில்லா | 101-00 |
| | ஸ்ரீ C. U. நஞ்சப்பா சிக்காரம் பாளையம் கோவை ஜில்லா | 101-00 |
| 6-12-78 | M/s சுந்தரவேல் சால்ட் கம்பெனி தூத்துக்குடி திருநெல்வேலி ஜில்லா | 250-00 |
| | ஸ்ரீ B.V. பத்மநாப முதலியார் சோம்வார்பேட்டை கர்நாடகம் கூர்க் | 151-00 |
| 8-12-78 | ஸ்ரீ A. சுப்பிரமணியபிள்ளை திருவனந்தபுரம்-23. | 1 001-00 |
| | Dr. L. வேலாயுதம் M.B.B.S. D.V கோலாலம்பூர் 02-12 மலேசியா | 1 000-00 |
| | அன்னை சாரதாமணி சங்கம் தூத்துக்குடி திருநெல்வேலி ஜில்லா | 500-00 |
| | ஸ்ரீ N. மீனாக்ஷிசுந்தரம் செட்டியார் திருவனந்தபுரம்-23 கேரளா | 101-00 |
| | ஸ்ரீ A.C. தானூ ஆரியசாலா ,, ,, ,, | 101-00 |
| | ஸ்ரீ P. ரத்னசாமி ராஜ்கோட் ,, 14 ,, | 100-00 |
| | ஸ்ரீ K. பகவதியப்பன் செட்டியார் சாலை ,, ,, | 100-00 |
| | ஸ்ரீ சாரதா களிக்கூடம் தூத்துக்குடி | 100-00 |
| 11-12-78 | M/s. சிவசண்முக விலாஸ் கைத்தறி ஜவுளி ஸ்டோர்ஸ் ராசிபுரம் | 101-00 |
| 13-12-78 | ஸ்ரீ A.S. ஆறுமுகம் ரைஸ்மில் அன்னவாசல் புதுக்கோட்டை ஜில்லா | 1 000-00 |
| | M/s.S.ஏகாம்பரநாதன் செட்டியார் தூத்துக்குடி-1. திருநெல்வேலி ஜில்லா | 501-00 |
| | ஸ்ரீ C. பெருமாள் செட்டியார் அம்மாபேட்டை சேலம்-3. | 101-00 |
| 14-12-78 | ஸ்ரீ P.K.S.A. ஆறுமுக நாடார் சிவகாசி திருநெல்வேலி ஜில்லா | 200-00 |
| 16-12-78 | ஸ்ரீ S. பாலகிருஷ்ண ரெட்டியார் காட்டன் பேட் பெங்களூர்-53 | 101-00 |
| | ஸ்ரீ D. சரவணன் திமிரி வட ஆற்காடு ஜில்லா | 100-00 |
| 18-12-78 | ஸ்ரீ K. சம்பந்தம் இன்டோ-சிலோன் ஹோட்டல் மதுரை | 101-00 |
| | ஸ்ரீ A.A. கோவிந்தராஜு நாயுடு கரம்பக்குடி புதுக்கோட்டை ஜில்லா | 100-00 |
| 19-12-78 | ஸ்ரீ சிவமுருகன் பழனியம்மாள் விருதுநகர் இராமநாதபுரம் ஜில்லா | 126-00 |
| | ஸ்ரீ K.N வெங்கடகிருஷ்ணராஜா அம்பாசமுத்திரம்திருநெல்வேலி ஜில்லா | 123-00 |
| | ஸ்ரீ O. சுப்பையா கவுண்டர் ஒரக்கலியூர் கோவை ஜில்லா | 101-00 |
| | ஸ்ரீமதி V.K.S. சாமுண்டீஸ்வரி அம்மாள் பொள்ளாச்சி ,, | 101-00 |
| 20-12-78 | ஸ்ரீ T.R. ராஜாராமன் B. Com (Hons) F.C A. விருதுநகர் | 151-00 |
| 21-12-78 | ஸ்ரீமதி ஆ. சிவகாம சுந்தரி அம்மாள் பாளையங்கோட்டை திருநெல்வேலி | 101-00 |
| 22-12-78 | ஸ்ரீ S.V.N. சின்னக்கண்ணு பிள்ளை சாரிட்டீஸ் தூத்துக்குடி ,, | 500-00 |
| | ஸ்ரீமதி உ. செல்லம்மா நாகர்கோயில் கன்னியாகுமரி ஜில்லா | 201-00 |
| | ஆசிரியர்கள் பாய்லர் பிளாண்ட் ஆரம்பப்பள்ளி (தமிழ்) திருவரம்பூர் | 101-00 |
| 23-12-78 | M/s. M.V.M. சுப்பிரமணிய நாடார்&சன்ஸ் தூத்துக்குடி | 251-00 |

| | | |
|---|---|---|
| | ஸ்ரீ G. பாண்டுரங்கம் பிள்ளை ஜெனரல் மர்ச்செண்ட் பாண்டிச்சேரி-1. | 101-00 |
| | ஸ்ரீ V. சுருளிபொம்மு கவுடர் காமயக்கவுண்டன் பட்டி மதுரை ஜில்லா | 101-00 |
| | ஸ்ரீ R. ஜகந்நாதன் D C. E. Strucl, ENGG. ,, | 101-00 |
| | ஸ்ரீ K.M. சரவணைப் பெருமாள்பிள்ளை கல்லிடைக்குறிச்சி | 101-00 |
| | ஸ்ரீ M.R. வெங்கட்டராஜா&கோ., ராஜபேட்டை கம்பம் மதுரை ஜில்லா | 100-00 |
| 24-12-78 | ஸ்ரீ K. வளையாபதி பட்டர்ஒர்த்ரோடு திருச்சி | 2 000-00 |
| | ஸ்ரீ K. இளங்கோ ,, ,, | 2 000-00 |
| | ஸ்ரீ C. நாச்சிமுத்து ஸ்ரீரங்கம் ,, | 1 140-00 |
| | ஓர் அன்பர் ரங்கம் புதூர், நெகமம் P O. கோவை ஜில்லா | 1 000-00 |
| | ஓர் பக்தை சேலம் | 100-00 |
| 25-12-78 | நிர்வாக டிரஸ்டி, "M. ரத்னசபாபதி தர்ம டிரஸ்ட்" மாரட்தெரு மதுரை | 501-00 |
| | M/s. R. பாலகுருசாமி இன்ஜினியரிங் காண்டிராக்டர் தூத்துக்குடி-2. | 500-00 |
| | M/s. R. தங்கராஜ் ,, ,, ,, | 500-00 |
| | M/s. லட்சுமி சால்ட் டிரேடிங் கம்பெனி ,, | 251-00 |
| | M/s. V.S அழகிரிசாமி செட்டியார் & பிரதர்ஸ் ,, | 251-00 |
| | ஸ்ரீ A. பெருமாள் முதலியார் பெரியண்ண முதலியார்&கம்பெனி ஈரோடு | 101-00 |
| | ஸ்ரீமதி K.R.C.C. நஞ்சம்மாள் குகை சேலம் | 101-00 |
| | அரும்பாவூர் T.S. தாமோதர ரெட்டியார் ஸ்ரீரங்கம் திருச்சி | 101-00 |
| 26-12-78 | அருள்துணை மாதர்சங்கம் மதுரை | 2 633-00 |
| | M/s தங்கம் செங்கல் ஒர்க்ஸ் ,, | 300-00 |
| | K. ஆண்டவர் புது அகில் வண்டன்மேட்டு கேரளா | 110-00 |
| | ஸ்ரீ P.R. சக்கையப்பன் கம்பம் மதுரை ஜில்லா | 101-00 |
| | ஸ்ரீ S.V.S. நடராஜன் செட்டியார் மதுரை | 101-00 |
| | ஸ்ரீ N. மோகனசுந்தரம் ,, | 101-00 |
| | ஸ்ரீமதி N. மீனும்பாள் ,, | 101-00 |
| | ஸ்ரீமதி M. கீதாரமணி ,, | 101-00 |
| | ஸ்ரீமதி கு.செ. மகமாயி அம்மாள் விருதுநகர் ராமநாதபுரம் ஜில்லா | 101-00 |
| | பழைய மாணவர் 218. R. மீனாட்சிசுந்தரம் லட்சுமிபுரம் மதுரை | 100-00 |
| 27-12-78 | ஸ்ரீமதி P.S.T. P. அம்மாலம்மாள் சுப்புராஜ்நகர் போடிநாயக்கனூர் ,, | 100-00 |
| 28-12-78 | ஸ்ரீ S அருணகிரி அரசன் & கம்பெனி திருநெல்வேலி ஜங்ஷன் | 250-00 |
| | ஸ்ரீமதி P.A N. சண்முகதாயம்மாள் சிவகாசி ராமநாதபுரம் ஜில்லா | 100-00 |
| | ,, P. ஜெயலக்ஷ்மி அம்மாள் சுப்பிரமணியபுரம் திருச்சி-20 | 100-00 |
| 29-12-78 | ,, R. லோகமணி அம்மாள் கூடலூர் P.o. மதுரை ஜில்லா | 101-00 |
| | ஸ்ரீ அ. ராமலிங்கம் & சன்ஸ் இராமச்சந்திரபுரம் இராமநாதபுரம் ஜில்லா | 101-00 |
| 30-12-78 | M/s. அய்யனர் காபி & டீ கம்பெனி தூத்துக்குடி-2 திருநெல்வேலி | 250-00 |
| | ஸ்ரீமதி ராஜம்மாள் சண்முகம் ,, 1 ,, | 250-00 |
| | ஸ்ரீ V தேவராஜன் குகை சேலம்-6 | 100-00 |
| | ஸ்ரீ J.K.K நடராஜன்&J K.K. முனிராஜ் கொமரபாளையம் சேலம் ஜில்லா | 1 000-00 |
| | ,, G.N சக்ரபாணி செட்டி&சன்ஸ் பி.லிட். பிராமனேட் ரோடு திருச்சி-1 | 300-00 |
| | M/s. பாலாஜீ ஆட்டோமொபைல்ஸ் கீழப்புலிவார்டு ரோடு ,, 8 | 200-00 |

| | | | | |
|---|---|---|---|---|
| 30-12-78 | M/s. கண்ணன் ஆட்டோமொபைல்ஸ் | புதுக்கோட்டைரோடு | திருச்சி-1 | 200-00 |
| | M/s. கணேஷ் ஆட்டோமொபைல்ஸ் | பிராமனேட் ரோடு | ,, 1 | 200-00 |
| | சுவாமி யோகானந்த கிரி | | மதுரை-1 | 101-00 |
| | ஸ்ரீ S. சுப்பிரமணியம் | வலியசாலை | திருவனந்தபுரம் | 101-00 |
| | ஸ்ரீ S. சந்திரன் | | ,, | 101-00 |
| | M/s P.K பரமேஸ்வரன்பிள்ளை | | ,, | 101-00 |
| | ஸ்ரீ R.S. ஜனகன் | பூழவான்கரி | ,, | 101-00 |
| | ஸ்ரீ E.K. புளிகுட்டியாபிள்ளை | சாலை | ,, | 101-00 |
| | ஸ்ரீ A. மயிலப்பன் | சாலை | ,, | 101-00 |
| | ஸ்ரீ T. மகாதேவன் | சாலை | ,, | 101-00 |
| | ஸ்ரீ K.A.S. ராமன் | சாலை | ,, | 100-00 |
| | ஸ்ரீ பொட்டிவேலு | சாலை | ,, | 100-00 |
| | எட்டு அன்பர்கள் | | சிவகாசி | 800-00 |
| | ஸ்ரீமதி S. கஸ்தூரி | | ,, | 100-00 |
| | ஸ்ரீமதி V.S.V.S. ராஜவடிவு அம்மாள் சிவகாசி | | ,, | 100-00 |
| | ஸ்ரீமதி M. நாகலோசனி மனோகர் | விருதுநகர் | ,, | 100-00 |
| | ஸ்ரீமதி S.P.G.C. நாகம்மாள் கா. அ. பெ. வை. சங்கம் | | விருதுநகர் | 100-00 |
| | ஸ்ரீ வா. மா. வ. மாரிமுத்துநாடார் தில்லையம்மாள் | | ,, | 100-00 |
| | ஸ்ரீ A.S.K. சங்கரலிங்க நாடார் பர்ம் | | ,, | 100-00 |
| | ஸ்ரீ S.A.A. அண்ணாமலை செட்டியார் | | ,, | 100-00 |
| | ஸ்ரீ S.A.A. பாலசுப்பிரமணியன் | | ,, | 100-00 |
| | M/s. O.K. டெக்ஸ்டைல்ஸ் | குகை | சேலம் | 100-00 |
| | ஸ்ரீ D.R.K. அர்த்தனாரிசெட்டி | ,, | ,, | 100-00 |
| | ஸ்ரீ P. துக்காரம் | 107 பேர்லேண்ட்ஸ் | சேலம்-4 | 100-00 |
| | M/s B.S.V.S. பசவலிங்கசெட்டியார் & சன்ஸ் | குகை | ,, | 100-00 |
| | M/s N.E. சித்தப்பசெட்டியார் & சன்ஸ் கொமரபாளையம் | | ,, | 100-00 |
| | ஸ்ரீ G. வெங்கடசாமி | நாயக்கர் புதுத்தெரு | மதுரை | 100-00 |
| | ஸ்ரீ V.R.S. பாண்டியன் சீதைவீடு, திருப்பாலை P.O. | | ,, | 100-00 |
| | ஸ்ரீ காத்தான்நாடார் & சன்ஸ் | | ,, | 100-00 |
| | ஸ்ரீ மாணிக்கம் செட்டியார் | ஆலங்குடி | ,, | 100-00 |
| | M/s P.N.S. ராமசாமி பிரதர்ஸ் | | ,, | 100-00 |
| | ஸ்ரீமதி K. வித்யாகண்ணன் | லட்சுமிபுரம் | ,, | 100-00 |
| | ஸ்ரீ N.S. முத்தையா நாடார் | அந்தோனியார்கோவில் தெரு | ,, | 100-00 |
| | ,, N.S.V. சுப்பையா நாடார் | ஆனந்தாஸ்ரமம் | ,, | 100-00 |
| | ஸ்ரீமதி ஜானகி ஆண்டியப்பன் | திருப்பாலை | ,, | 100-00 |
| | ஸ்ரீ C. சன்முகசுந்தரம் | நியுமகாளிப்பட்டிரோடு | ,, | 100-00 |
| | M/s சேகர்ஸ் ஆட்டோமொபைல்ஸ் | கீழப்புலிவார்டுரோடு | திருச்சி-8 | 100-00 |
| | இந்தியா சிந்தடிக் ஜெம்ஸ் | பெரியசெட்டிதெரு | ,, | 100-00 |
| | M/s P.R. டைமண்ட் & கோ | மின்ட்தெரு | சென்னை | 100-00 |
| | ஸ்ரீ P.S.S. சங்கரலிங்கம் & பிரதர்ஸ் & சன்ஸ் | | தூத்துக்குடி | 100-00 |
| | ,, C. பால்ராஜ் பழரசம் | ,, | | 100-00 |
| | ஸ்ரீமதி K.P. ராஜம்மாள் | ,, | ,, | 100-00 |
| | ,, T.S. மீனாக்ஷி அம்மாள் | பாலக்காடு | கேரளமாநிலம் | 100-00 |
| | ,, M. சரஸ்வதி | கிருஷ்ணகிரி | தர்மபுரிஜில்லா | 100-00 |
| | ,, S. மாணிக்கம்மாள் | ,, | ,, | 100-00 |
| | ஸ்ரீ M.A. பழனியப்பசெட்டியார் தி ஜவஹர் மில்ஸ் லிட். | | சேலம்-5 | 10 001-00 |
| | ரூ. 100க்கு கீழ்வந்த நன்கொடை மொத்தம். | | | 7 879-00 |
| | | | ஆக மொத்தம் | 1 15 265-00 |







ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம

# தர்ம சக்கரம்

*அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்*
*பிறவாழி நீந்தல் அரிது.*

| சக்கரம் 28 | காளயுக்தி ஹூ தை மீ | ஆரம் 1 |
| --- | --- | --- |

## பிரார்த்தனை

भवन्तमेवानुचरन्निरन्तरं प्रशान्तनिःशेषमनोरथान्तरः ॥
कदाहमैकान्तिकनित्यकिङ्करः प्रहर्षयिष्यामि सनाथजीवितः ॥

— यमुनाचार्यः

**பவந்தமேவ அனுசரந் நிரந்தரம் ப்ரசாந்த நி:சேஷமனோரதாந்தர: ॥**
**கதாஹம் ஐகாந்திக நித்ய கிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி ஸநாதஜீவித: ॥**

— யமுனாசார்யர்

பிரபோ, என்னுடைய ஆசைகளனைத்தையும் ஒதுக்கிவிட்டு உன்னுடைய நித்திய தொண்டனாகி உன்னையே இறைவனாகக்கொண்டு உனக்குத் தொண்டுபுரிந்து உன்னை நான் எப்பொழுது திருப்திப்படுத்துவேனோ?

***நாடிலும் நின் அடியே நாடுவன் நாள்தோறும்***
***பாடிலும் நின்புகழே பாடுவன் — சூடிலும்***
***பொன் ஆழி ஏந்தினான் பொன் அடியே சூடுவேற்(கு)***
***என் ஆகில் என்னே எனக்கு?***

— *திவ்வியபிரபந்தம்.*

# அருள் விருந்து

அனைத்தையும் விழுங்க வல்லது மரணம்.

நலனை அறிந்துகொள்ளுதற்கும் மேலான நல்லறிவு இல்லை.

மனம் தெளிந்திருப்பவனே தேசத்துக்கு நல்ல தொண்டனாகிறான்.

கடவுளோடு தனித்திருக்க வல்லவனே ஆற்றல் மிகப்படைத்தவனாகிறான்.

மேலோன் ஒருவனுடைய கூற்று முற்றிலும் தர்ம சொரூபமாக இருக்கும்.

பிரபஞ்சம் பரத்தைச் சார்ந்திருப்பதால் அதனிடத்துப் புனிதம் பொலிகிறது.

பிறர்க்கு நலம் செய்கின்றவனுக்கு ஆரோக்கியமும் ஆனந்தமும் அதிகரிக்கின்றன.

நீ எதற்குத் தகுதி உடையவன் ஆகின்றாயோ அது தானாக உனக்கு வந்து வாய்க்கிறது.

பரத்தைச் சார்ந்திருக்குமளவு மானுடனுக்குக் கவலைகள் அழிந்துபட்டுப் போகின்றன.

மானுடன் வெறும் உடம்பு அல்லன். மாண்புகள் பல அவனிடம் அமைந்திருக்கின்றன.

இயற்கையின்கண் ஒழுங்குப்பாடு அமைந்திருப்பதை அறிந்துகொள்வது நல்லறிவு ஆகும்.

தன்னை முற்றிலும் நலத்தில் தீட்டி எடுப்பவனே உலகுக்கு நன்கு பயன்படுபவன் ஆகிறான்.

உள்ளத்தினுள் புதைந்திருக்கும் தெய்விகத்தைத் தோற்றுவிப்பதற்கு வாழ்வு உதவுகிறது.

செல்வனுக்கும் வறியனுக்குமிடையில் பெரிய வேற்றுமை இருக்கும் நாட்டில் நல்ல ஆட்சி நிகழாது.

பரமாசாரியன் ஒருவன் பல்லாண்டுகளுக்கு ஒரு தடவை பூவுலகில் தோன்றுகிறான். அவன் பரமாசாரியன் என்பதை அவனுடைய வாழ்வே விளக்குகிறது.

தன்னுடைய தெளிந்த கொள்கையினின்று சிறிதேனும் பிறழாதிருந்துகொண்டே மானுடன் ஒருவன் சமுதாயத்துக்கு நல்ல சேவை செய்யமுடியும்.

## பரமஹம்சர் புகட்டிய

# பெருநெறி விளக்கம்

பரமஹம்சர் பக்தர்கள் பலரோடு உரையாடிக் கொண்டிருக்கிறார்.

"இனி, போராட்டத்தில் இரண்டுவிதப் பாங்குகள் இருக்கின்றன. கோட்டைக்குள்ளே இருந்துகொண்டு எதிரியைத் தாக்குவது ஒரு முறை. வெட்டவெளியில் வந்து அவனை எதிர்ப்பது மற்றொரு முறை. கோட்டைக்குள்ளே இருந்துகொண்டு போர்புரியும் பாங்கில் இருக்கின்றான் குடும்பி ஒருவன். அவனுக்கு உணவைப்பற்றியும் ஏனைய தேவைகளைப்பற்றியும் பிரச்னை ஏதுமில்லை. இக்கலியுகத்தில் மனிதனுடைய ஜீவிதம் முற்றிலும் உணவைச் சார்ந்திருக்கிறது. துறவி ஒருவன் உணவை நாடிப் பல வீடுகளுக்குச் செல்லுகின்றான். அத்தகைய நிர்ப்பந்தம் இல்வாழ்பவனுக்கு இல்லை. சொந்த இடத்திலிருந்து அவனுக்குத் தேவையான உணவு தானாக வந்து சேருகிறது. ஆதலால் அது கோட்டைக்குள்ளிருந்துகொண்டு போர் புரிவதற்கு ஒப்பானது."

"மரத்தினின்று கீழே வீழ்ந்து கிடக்கின்ற சருகு ஒன்றன் பாங்கில் கடவுள் பக்தனொருவன் உலகில் வாழ்ந்திருப்பானாக. கீழே வீழ்ந்து கிடக்கிற சருகைக் காற்றடித்துச் சில வேளைகளில் வீட்டுக்குள் கொண்டு வருகிறது. இன்னும் சில வேளைகளில் அதைக் குப்பைமேட்டில் ஒதுக்கித் தள்ளுகிறது. எங்கெல்லாம் காற்று அதை மோதித் தள்ளுகிறதோ ஆங்கெல்லாம் அச்சருகு உழன்று கிடக்கிறது. சில வேளைகளில் நல்ல இடத்திலும், இன்னும் சில வேளைகளில் கெட்ட இடத்திலும் அது தள்ளப்பட்டுக் கிடக்கிறது. கடவுள் இப்பொழுது உங்களை இவ்வுலகின் கண் வைத்துள்ளார். அது மிக நன்று. இவ் உலகில் வாழ்ந்திருங்கள். இதே உலகில் அவர் மீண்டும் உங்களை இதிலும் மேலான இடத்தில் தூக்கி வைப்பாராகில் அந்த மேலாம் ஸ்தானத்தைப் பற்றிச் சிறிது சிந்தித்துப்பாருங்கள். மேலாம் நிலைக்கு வந்துள்ள ஒருவன் மேலாம் செயல்களில் ஈடுபட வேண்டும். வசதியோடு கூடிய வாழ்வை மேலாம் லட்சியத்துக்குப் பயன்படுத்தாதவன் வீணே வாழ்ந்திருப்பவனாகிறான்.

"பக்தனொருவன் எத்தகைய சூழ்நிலையில் வைக்கப்பட்டிருந்தாலும் அந்தச் சூழ்நிலையை அவன் ஆத்ம சாதனத்துக்கென்றே பயன்படுத்துகிறான். அப்படிப் பயன்படுத்திக்கொண்டிருப்பதற்கிடையில் தன்னுடைய வாழ்வு முழுவதையும் அவன் பரமனிடத்து ஒப்படைக்கிறான். பக்தர்களாகிய நீங்கள் உங்களுடைய வாழ்வை இறைவனுடைய திருவடிகளில் ஒப்படைத்து வையுங்கள். அப்படிச் செய்தால் உங்களிடத்துப் பிறகு குழப்பம் ஏதும் உண்டாகாது. யாண்டும் இறைவனையே சார்ந்திருக்கும் பக்தர்கள் வாழ்க்கைக்குரிய உண்மை ஒன்றைச் சுவானுபவத்தில் அறிய வருகின்றனர். பலப்பல ஜீவகோடிகள் மூலமாக நிகழ்கின்ற செயல்கள் யாவும் உண்மையில் இறைவனுடைய செயல்களேயாம். இறைவனுடைய திருவுளப்பாங்கின்படியே உலகில் யாவும் நிகழ்ந்து வருகின்றன. பக்தனொருவன் நிகழ்ச்சிகளனைத்தையும் இராமனுடைய இச்சை, எனப் பொருள்படுத்துகிறான்."

பக்தனொருவன்: "ஐயனே ராமனுடைய இச்சை, என்பதைப் பற்றிய கதை ஒன்று உள்ளதாம். அக்கதை யாதோ?"

பரமஹம்சதேவர்: "கிராமம் ஒன்றில் நெசவுத் தொழில்காரன் ஒருவன் வாழ்ந்து வந்தான். அவன் பக்தி மிக வாய்க்கப்பெற்றவன். கிராம வாசிகளுக்கு அவனிடத்தில் நம்பிக்கை மிக இருந்தது. சந்தைக்கடையில் வைத்து ஜவுளிகளை அவன் விற்று வந்தான். வாங்குபவர்கள் வந்து ஒரு துணியின் விலை என்ன என்று கேட்டால் அந்தச் சேணியன் சொல்லியதாவது: 'இராமனுடைய இச்சையினால் நூலின் கிரயம் ரூபாய் ஒன்று; இராமனுடைய இச்சையினால் நெசவுக்கூலி நாலணா; இராமனுடைய இச்சையினால் ஊதியம் இரண்டணா. இராமனுடைய இச்சையினால் இந்தத் துணியின் கிரயம் ஒரு ரூபாய் ஆறணா.' அவனுடைய சொல்லில் கிராம வாசிகள் முழு நம்பிக்கை வைத்திருந்தனர். அவன் சொன்ன விலையைக் கொடுத்து

அவர்கள் துணியை வாங்கிக் கொள்ளுவார்கள். சேணியன் பக்தி மிக வாய்க்கப்பெற்றவன். இரவு போஜனம் முடிந்த பிறகு அவன் நெடு நேரம் கடவுள் வழிபாட்டிலும், ஜபம், தியானத்திலும் அமர்ந்திருப்பான். ஒரு நாள் நள்ளிரவில் அவனுக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. வழிபாட்டு மண்டபத்தில் அமர்ந்துகொண்டு அவன் ஜபம் பண்ணிக்கொண்டு இருந்தான். அப்பொழுது அவ்வழியிலே திருடர்கள் சிலர் போய்க்கொண்டிருந்தனர். அவர்கள் திருடிய பொருள்களை மூட்டைக் கட்டிக்கொண்டு வந்தனர். அதைச் சுமப்பதற்கு ஆள் ஒருவன் தேவையாயிருந்தது. இந்தச் சேணியனைப் பிடித்து அவன் தலையின் மீது தங்கள் மூட்டையை வைத்து நடந்து செல்லும்படி அவர்கள் இவனைத் தூண்டினர். திடீரென்று போலீஸ்காரர்கள் அங்கே வந்தனர். திருடர்கள் ஓட்டம் பிடித்து விட்டனர். சேணியன் மட்டும் தன் தலையின் மீதிருந்த மூட்டையோடு அகப்பட்டுக் கொண்டான். அவனை அவர்கள் பிடித்து அன்று இரவு காவல் நிலையத்தில் அடைத்து வைத்தனர். அடுத்த நாள் காலையில் நியாயாதிபதியிடம் அவனைப் போலீஸார் கொண்டு வந்தனர். இச்செய்தி ஊரெங்கும் பரவியது. ஊரார்க்கு வியப்பு ஒருபுறம்; சீற்றம் ஒருபுறம்; சந்தேகம் ஒருபுறம் இப்படியெல்லாம் இருந்தன. நியாய ஸ்தலத்தில் பெருங்கூட்டம் கூடிவிட்டது. இவன் நேர்மையானவன் என்று நியாயாதிபதியிடம் ஊரார் இயம்பினர். நியாயாதிபதியோ சேணியனுடைய வாக்கு மூலத்தை வேண்டினர்.

"சேணியன் சொன்னதாவது: 'எஜமானனே, இராமனுடைய இச்சையினால் நான் இரவு சாப்பாட்டை முடித்திருந்தேன். இராமனுடைய இச்சையினால் வழிபாட்டுக்குரிய மண்டபத்தில் நான் அமர்ந்திருந்தேன். இராமனுடைய இச்சையினால் நெடுநேரம் எனக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. இராமனுடைய இச்சையினால் நான் ஜபமும், தியானமும் பண்ணிக்கொண்டிருந்தேன். இராமனுடைய இச்சையினால் திருடர்கள் சிலர் அங்கு வந்து சேர்ந்தனர். இராமனுடைய இச்சையினால் அவர்கள் என்னைப் பிடித்து இழுத்து மூட்டை ஒன்றை என் தலையின்மீது வைத்தனர். இராமனுடைய இச்சையினால் போலீஸ்காரர்கள் ஆங்கு விரைந்து வந்தார்கள். இராமனுடைய இச்சையினால் திருடர்கள் ஓட்டம்பிடித்துவிட்டனர். இராமனுடைய இச்சையினால் நான் அகப்பட்டுக்கொண்டேன். இராமனுடைய இச்சையினால் போலீஸ்காரர்கள் என்னைச் சிறையில் அடைத்து வைத்திருந்தனர். இராமனுடைய இச்சையினால் அவர்கள் இப்பொழுது என்னை இங்கே கொண்டுவந்து நிற்க வைத்திருக்கின்றனர். 'நியாயாதிபதி இந்தச் சேணியன் ஒரு பக்தன் என்பதை அறிந்து கொண்டார். இவன் களங்கமற்றவன் என்பதையும் அவர் அறிந்துகொண்டார். இவனுக்கு அவர் விடுதலை கொடுத்து அனுப்பினர். திரும்பிப் போகும்பொழுது 'இராமனுடைய இச்சையினால் நான் விடுவிக்கப்பட்டிருக்கிறேன்' என்று கிராமவாசிகளிடம் இவன் கூறினன். பக்தன் ஒருவனுடைய பாங்கு இத்தகையது.

"மானுடனொருவன் குடும்பியாயிருப்பதும் அல்லது துறவியாயிருப்பதும் இராமனுடைய இச்சையைப் பொறுத்ததாம். பக்தர்களாகிய நீங்கள் உங்களுடைய அனைத்தையும் பகவானுக்கு அர்ப்பணம் பண்ணிப் பழகுங்கள். உங்களுடைய கடமைகளைப் பகவானுக்குரிய பணிவிடைகளாகக் கருதி அவைகளை முறையே இயற்றிவாருங்கள். இதுவே நீங்கள் செய்யக் கிடக்கும் கடமையாகும். குமஸ்தா ஒருவன் ஒருதடவை பெருங்குற்றம் செய்தான். அதற்குத் தண்டனையாக அவனைச் சிறையில் கைதியாகப் பிடித்து அடைத்து வைத்தனர். சிறைச்சாலைத் தண்டனையும் காலக்கிரமத்தில் முடிவுற்றது. குமஸ்தா விடுதலை பெற்றான். விடுதலை அடைந்தவன் பிறகு என்ன செய்தான் என்பது உங்களுக்குத் தெரியுமா? பழையபடி. குமஸ்தா வேலையை அவன் நாடிச் சென்றான். அவனால் வேறு என்ன செய்ய முடியும்? அவனவனுக்கு இயன்ற ஏதேனும் ஒரு தொழிலை முறையாகப் புரியவேண்டும். அத்தொழில் புரிவதையே ஈசனுடைய ஆராதனையாகக் கருதவேண்டும்.

"குடும்பி ஒருவன் முறையாகத் தன்னுடைய இல்வாழ்வை நடாத்தி வரவேண்டும். அதன் மூலம் அவன் ஒரு ஜீவன் முக்தன் ஆவதும் சாத்தியம். ஜீவன் முக்தி நிலைக்குக் குடும்ப வாழ்வு ஒருபொழுதும் இடைஞ்சல் ஆகாது. ஞானத்தை அடையப்பெற்றுள்ள ஒருவன் இங்கு என்றும், அங்கு என்றும் இடவேற்

றுமை பாராட்டுவதில்லை. இடங்களனைத்தையும் அவன் ஒரே பாங்கில் பொருள்படுத்துகிறான். ஓரிடத்தைவிட மற்றோர் இடம் மேலானது என்று பாகுபடுத்துபவனிடம் இன்னும் பேத புத்தியிருக்கிறது. பேதபுத்தி ஞானத்தின் விளைவு ஆகாது.

"ஜயகோபாலருடைய பங்களாவில் நான் கேசவசந்திரசேனரை முதல் தடவையாகச் சந்தித்தேன். இங்குக் குழுமியிருப்பவர்களுக்கிடையில் இவர் ஒருவர்தாம் வாலையிழந்தவர் என்று நான் இயம்பினேன். அதைக் கேட்டு எல்லாரும் நகைத்தனர். கேசவசந்திரசேனரோ, 'சிரிக்காதீர்கள். அவர் கூற்றில் ஏதேனும் ஆழ்ந்த கருத்து இருக்கக்கூடும். அப்படி ஏதாவது இருக்கிறதா வென்று அவரிடத்தே நாம் வினவுவோம்' என்றார். அதற்கு மறுமொழியாகக் கேசவரிடம் நான் கூறியதாவது: 'தவளைக்குஞ்சு ஒன்றுக்கு வால் இருக்கும் வரையில் தண்ணீருக்குள்ளேயே அது வாழ்ந்திருக்கவேண்டும். தண்ணீரை விட்டு அதை வெளியே எடுத்தால் அது மாண்டுபோம். நிலத்தில் நகர்ந்து சென்று வாழ்ந்திருக்க அதற்கு இயலாது. ஆனால் வால் வீழ்ந்தானதும் அது தத்தித்தத்தி நிலத்துக்கு வருகிறது. அதன் பிறகு அது நீரிலும் வாழ வல்லது, நிலத்திலும் வாழ வல்லது. அதற்கு நிகராக மானுடனொருவனுக்கு அஞ்ஞானம் என்னும் வால் வீழாதிருக்கும் வரையில் அவன் உலக வாழ்வு என்னும் நீரினுள்ளேயே வசித்திருப்பவனாகிறான். மற்று வால் வீழ்ந்தான பிறகு அதாவது பரஞானத்தைப் பெற்றான பிறகு அவன் பந்தபாசமற்றவனாகப் பிரபஞ்சத்தில் சஞ்சரிக்கலாம்; அல்லது ஒரு குடும்பியைப் போன்று சமுதாயத்திலும் அவன் வாழ்ந்திருக்கலாம். எந்த நிலையும் அவனைப் பந்தபாசத்தில் கட்டுப்படுத்தாது."

இவ்விளக்கத்தைக் கேட்ட மகிமசரணும் ஏனைய பக்தர்களும் திகைத்துப்போய் பேச்சு மூச்சு அற்று அமைதியாக அமர்ந்திருந்தனர்.

பரமஹம்சதேவர்: "மதுரநாத் விஸ்வாசரிடம் முன்பு ஒருதடவை கருத்து ஒன்றை நான் தெரிவித்தேன். அதாவது தேவேந்திரநாத் தாகூர் கடவுள் சிந்தனையிலேயே ஈடுபட்டிருப்பதாக நான் கேள்விப்படுகிறேன். அத்தகையவரைப் பார்க்க நான் விரும்புகிறேன் என்று இயம்பினேன். மதுரநாதரும் சரி என்று இசைவு கொடுத்தார். என்னை அவரோடு அழைத்துச் செல்வதாகவும் இயம்பினார். அவரும் தேவேந்திரநாத்தாகூரும் இந்துக் கல்லூரியில் சேர்ந்து கல்வி கற்றார்களாம். அவர்கள் இருவர்களுக்கிடையில் நெருங்கிய நட்பு இருந்ததாகவும் அவர் தெரிவித்தார். அதன்படி அவர் என்னை அழைத்துக்கொண்டு அப்பெருமகனார் வீட்டுக்குச் சென்றார். நெடுநாளாக அவர்களிருவரும் ஒருவரை ஒருவர் சந்திக்காதிருந்தனர். நாங்கள் ஆங்குச் சென்றவுடனே மதுரநாதரைப் பார்த்துத் தேவேந்திரநாத்தாகூர் பகர்ந்ததாவது: 'வடிவத்தில் நீர் இப்பொழுது ஒரு சிறிது மாறியமைந்திருக்கின்றீர். தடித்தவராகவும் சிறிது வயிறு பெருத்தவராகவும் அமைந்திருக்கின்றீர்.' அதற்குப் பதில் ஒன்றும் சொல்லாது அவர் என்னைச் சுட்டிக்காட்டி, 'இவர் தம்மைத் தரிசிக்க வந்திருக்கிறார். இவர் யாண்டும் கடவுள் பித்தம் பிடித்தவர்,' என்று இயம்பினார். நானோ தேவேந்திரநாத்தாகூருடைய உடல் அமைப்புகளைக் காண விரும்பினேன். என்னுடைய விருப்பத்தை அவரிடம் தெரிவித்தேன். உடனே அவர் அணிந்திருந்த சட்டையைக் கழற்றி எடுத்தார். அவருடைய மேனி சிறிது பொன்னிறம் வாய்க்கப்பெற்றதாயிருந்தது. அவருடைய மேனியின் மீதிருந்த உரோமத்தில் நரை ஏதும் தென்படவில்லை.

"தேவேந்திரநாத்தாகூரைப் பார்த்தவுடனே அவரிடத்துச் சிறிது தற்பெருமையிருந்ததாக எனக்குத் தென்பட்டது. அப்படி இருப்பது இயல்புதானே. அவர் செல்வம் மிகப் படைத்தவர். கல்விமானாக அவர் திகழ்ந்தார். பேரும் புகழும் வேண்டியவாறு அவருக்கு வாய்த்திருந்தன. மதுரநாதரிடம் நான் கேள்வி ஒன்று கேட்டேன். அதாவது: 'தற்பெருமை ஞானத்தின் விளைவா அல்லது அஞ்ஞானத்தின் விளைவா? பிரம்ம ஞானி ஒருவனிடம் நான் ஒரு பண்டிதன்; நான் ஒரு ஞானி; நான் பணம் படைத்தவன்' என்ற எண்ணங்கள் அமையுமா? தேவேந்திரநாத்தாகூரோடு உரையாடிக்கொண்டிருந்தபொழுது என்னுடைய மனநிலை திடீரென்று மாறியமைந்தது."

# பராபரக் கண்ணி

( தாயுமானவர் இயற்றியது )

374. கண்ட அறிவகண்டா
காரமென மெய்யறிவிற்
கொண்டவர்க்கே முத்தி
கொடுப்பாய் பராபரமே.

கண்ட அறிவு என்பதற்குப் பொருள்கள் இரண்டு உள. பஞ்சேந்திரியங்களைக்கொண்டு நுகர்கிற அறிவுகள் யாவும் கண்கூடாகக் கண்ட அறிவு ஆகின்றன. பஞ்சேந்திரியங் கள் மூலமாக நுகர்கிற அறிவு ஏகதேச அறிவு ஆகிறது. அது முழு அறிவு ஆகாது. பிரபஞ் சத்தை நுகர்தற்கே பஞ்சேந்திரியங்கள் மூல மாக வரும் கண்ட அறிவு பயன்படுகிறது. பர வஸ்துவைச் சுவானுபூதியில் அறிவதற்குப் பஞ் சேந்திரியங்கள் உதவமாட்டா. ஆதலால் பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க நெறி நின்ரூர் நீடுவாழ்வார், என்னும் பொய்யா மொழி வந்துள்ளது. பஞ்சேந்திரியங்களை வெல் லுவதால் ஞானக்கண் உருவெடுக்கிறது. பரத்தை அறிதற்கு அது பயன்படுகிறது.

கண்ட அறிவு என்பதற்கு அமைந்துள்ள இரண்டாவது பொருள் வருமாறு: கண்டம் என்ருல் துண்டிக்கப்பட்டது. அகண்டம் என் ருல் துண்டிக்கப்படாதது. பஞ்ச பூதங்களுள் ஆகாசம் என்னும் முதல் பூதம் துண்டிக்கப் படாதது. ஏனைய நான்கு பூதங்களும் துண் டிக்கப்பட்டவைகள். இதற்கு நிகராகச் சிதா காசம் அல்லது அறிவுப்பெருவெளி துண்டிக் கப்படாதது. ஜீவாத்மாவின் உள்ளத்தில் அமைந்துள்ள தகர ஆகாசம் துண்டிக்கப்பட் டதுபோன்று தென்படுகிறது. ஜீவபோதம் துண்டிக்கப்பட்டது. பரபோதமோ துண்டிக் கப்படாதது. கட ஆகாசம் துண்டிக்கப்பட்டது போன்று தென்படுகிறது. மகா ஆகாசமோ அகண்டமாய் யாண்டும் உளது. துண்டிக்கப் பட்டது போன்று தென்பட்டுக் கொண்டிருக் கின்ற கட ஆகாசம் உண்மையில் மகா ஆகாசத் துக்குப் புறம்பானதன்று. அதே விதத்தில் துண்டிக்கப்பட்டதுபோன்று தன்னைக் கருதிக் கொள்கின்ற ஜீவாத்மன் உண்மையில் துண்டிக் கப்படாது யாண்டும் தன்மயமாயிருக்கும் பர மாத்மாவுக்குப் புறம்பானதன்று. இவ்வுண் மையைச் சுவானுபூதியில் அறிகிறவன் முக்த புருஷன் ஆகிருன் என்பது இக்கண்ணியின் கருத்து.

375. ஈருக வல்வினை நான்
என்னுமல் இன்பசுகம்
பேரும் படிக்கடிமை
பெற்றேன் பராபரமே.

ஈறு-முடிவு

வினைக்கும் ஆத்மாவுக்கும் எந்த விதமான தொடர்பும் இல்லை. மற்று பிரகிருதியோ கர்ம சொரூபம். வினைகள் யாவும் பிரகிருதியில் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. உடலும் உள்ளமும் பிரகிருதியின் கூறுகள். அவை களின் செயலைத் தன் செயல் என ஜீவாத்மன் அபிமானிக்கிருன். இந்த அபிமானத்திற்கு ஈறு அல்லது முற்றுப்புள்ளி போடவேண்டும். பிரகிருதியினுடைய வல்வினைகளினின்று ஜீவாத்மன் தன்னை விடுவித்துக் கொண்டு பரமாத்மாவைச் சார்ந்திருத்தல் வேண்டும். அப்பொழுது பரமாத்மாவின்கண் உள்ள பேரா னந்தம் ஜீவாத்மனுக்கும் சொந்தமாகிறது. அதுவே ஜீவாத்மனுடைய யதார்த்தநிலை. தன்னைப் பிரகிருதியினின்று பிரித்தெடுத்துக் கொண்டு பரமாத்மனிடம் தன்னை ஒப்படைப் பது குறிக்கோள் என்னும் மேலாம் கருத்து இக்கண்ணியில் அடங்கியிருக்கிறது.

376. பெற்ருர் அனுபூதி
பேசாத மோனநிலை
கற்ருர் உனைப்பிரியார்
கண்டாய் பராபரமே.

அனுபூதி பெறுதல் வாழ்க்கையின் குறிக் கோளாகிறது. அனுபூதி பெறுவதை ஓர் உப மானத்தின் மூலம் விளக்குவது அவசியமா கிறது. பாலைப்பற்றிச் சிலர் கேள்விப்பட்டி ருக்கின்றனர். அதற்கு நிகர் கடவுளைப்பற்றிப் புஸ்தகங்களைப் படித்து அறிந்துகொள்வதா கும். அது வெறும் ஆதரவு அற்ற நம்பிக்கை யாம். சிலர் பாலைப் பார்த்திருக்கின்றனர். பாலைப் பார்ப்பதற்கு நிகர் பரம்பொருளின் சாந்நித்தியத்தைத் தியானத்தின் வாயிலாக உள்ளத்தின் உள்ளே உணர்வதாகும். இன்

னும் சிலர் பாலைக் கையால் தொட்டு விற்கவோ, வாங்கவோ செய்கின்றனர். அச்செயலுக்கு நிகரானது தியானாவஸ்தையில் கடவுளின் காட்சியைக் காணுதல். பாலைப் பருகுபவர்களே பாலின் பாங்கை உள்ளபடி அறிந்தவர்களாகின்றனர். அதற்கு நிகராகச் சவிகல்ப சமாதியில் கடவுளோடு ஒட்டி உறவாடுதல் மேலான நிலையாகிறது. இது அனுபூதியின் ஆரம்பநிலையாகிறது. பாலைப் பருகி அதைச் செமித்துத் தன்மயமாக்குபவர்களே பாலைமுற்றிலும் அறிந்தவர்களும், அனுபவித்தவர்களும், பயன்படுத்தியவர்களும் ஆகின்றனர். அன்னவர்களுடைய நிலைக்கு நிகர் சுவானுபூதியில் நிர்விகல்ப சமாதி அடைவதாம். விகல்பம் ஒன்றுக்கும் ஆங்கு இடமில்லை. எங்கு விகல்பம் இருக்கிறதோ அங்கு மனதின் செயல் அமைந்திருக்கிறது. மனதற்ற நிலையில் விகல்பம் ஏதுமில்லை. சுவானுபூதியின் முடிந்த நிலையில் ஜீவாத்மன் பரமாத்மனில் ஒன்றுபடுகிறான். அதன் பிறகு ஜீவபோதம் இம்மியளவும் எஞ்சியிருப்பதில்லை. இந்நிலை அடைவதே ஜீவாத்மன் வாழ்ந்து வருகின்ற பிரபஞ்ச வாழ்வின் குறிக்கோளாகும். எங்குப் பேச்சு இருக்கிறதோ அங்கு ஓசை உண்டு. ஓசையிருக்குமிடத்தை மோனநிலை என்றோ, மௌனநிலை என்றோ மொழியலாகாது. பிரபஞ்ச முழுதும் இயங்கிக்கொண்டிருப்பதால் அது ஓசை மயமாய் அமைந்திருக்கிறது. ஆதலால் பிரபஞ்சத்தின்கண் முடிந்த மோன நிலை இல்லவே இல்லை. பிரபஞ்சத்திற்கப்பால் அதற்கு ஆதாரமாயிருப்பது பரவஸ்து. பரவஸ்துவினிடம் அசைவு ஏதுமில்லை. ஆதலால் அதனிடத்து மௌனம் நிலைபெற்றிருக்கிறது. அந்த மௌனத்தைக் கற்பதும்அதில் ஜீவவியக்தியைக் கலைத்துத் தள்ளுவதும் ஒன்றேயாம். கடலில் வீழ்ந்த மழைத்துளி எங்ஙனம் கடலினின்று பிரிவதில்லையோ அங்ஙனம் அனுபூதியின் வாயிலாகவோ மோனநிலையை எட்டுவதின் வாயிலாகவோ பரம்பொருளில் லயமான ஜீவாத்மா பரம்பொருளை விட்டுப் பிரிவதில்லை. இந்நிலையையடைவதற்கே ஜீவாத்மன் படிப்படியாகத் தன்னைப் பக்குவப்படுத்தி வருகிறான். இதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும் என்னும் கோட்பாட்டை 'கண்டாய்' என்னும் சொல் குறித்துக் காட்டுகிறது. ஜீவாத்மன் தன்னைப் பரமாத்மாவினிடத்து ஒப்படைத்துவிட வேண்டுமென்பது இக்கண்ணியின் உட்பொருள்.

**377.** **நீயே நான் என்று**
**நினைப்பும் மறப்பும் அற**
**தாயே அனைய (நீ)**
**அருள் தந்தாய் பராபரமே.**

பரவஸ்து ஜீவாத்மனுக்குத் தந்தையாகவும், தாயாகவும் அமைந்துள்ளது. ஆதலால்தான் அப்பரமனுக்குத் தாயும் ஆனவன் எனப் பெயர் வந்துள்ளது. ஜீவாத்மனைத் தோற்றுவிப்பதும் பேணுவதும் அப்பரமாத்மனின் அருள் நிறைந்த செயலாகின்றன. பேணுதல் அலாதியாகத் தாயின் செயலாகிறது. அர்த்தநாரீஸ்வரனாக இலங்குகின்ற பரமனைத் தந்தையாகவும்தாயாகவும் பாவிப்பது முறை. ஜீவனை முற்றிலும் பக்குவப்படுத்திப் பரமனிடத்துக்கொண்டு சேர்ப்பது தாயின் செயல். உலக நடைமுறையில் இதற்கு நல்ல சான்றாக சீதாதேவி இலங்குகின்றாள். பிரகிருதித் தாயாகிய அவளுடைய கர்ப்பத்தில் பரமாத்மாவின் சொரூபமாகிய ஸ்ரீ ராமன் தன் பீஜத்தைக் கர்ப்பாதானமாக நிலைநாட்டினான். அதன் பிறகு அவள் தனித்திருந்து கர்ப்பத்தில் வைக்கப்பட்டதை உருவாக்கிப் பெற்றெடுத்து வளர்த்துப் பக்குவப்படுத்தி பரமாத்ம சொரூபமாகிய இராமனிடத்து ஒப்படைக்கிறாள். இச்செயல் ஓயாது இயற்கையின்கண் நிகழ்ந்து வருகிறது. இராமன் தானே குசனாகவும், லவனாகவும் வடிவெடுத்து விளையாடினான். அங்ஙனம் பரமாத்மா தானே அனந்தங்கோடி ஜீவாத்மாக்களாக விளங்கிக்கொண்டிருக்கிறான். அத்தனை ஜீவாத்மாக்களைப் பிரகிருதித்தாய் கிருபை கூர்ந்து பேணிப் பக்குவப்படுத்தி வருகின்றாள். பக்குவமாகி வருகின்ற ஜீவாத்மனுக்கு நனவில் நினைப்பும், உறக்கத்தில் மறதியும் மாறிமாறியமைகின்றன. நனவையும், உறக்கத்தையும் கடந்துள்ள பரபோதத்தில் நினைப்புக்கும், மறப்புக்கும் இடமில்லை. அந்நிலையில் ஜீவாத்மன் பரமாத்மன் என்னும் பேதமில்லை. சுத்த சைதன்யமே யாண்டும் உளதாகிறது என்னும் கோட்பாடு இக்கண்ணியில் இனிது அடங்கியிருக்கிறது.

# அருள் நெறி

(ஸ்ரீ ராமகிருஷ்ணரின் சிஷ்யரான சுவாமி அபேதானந்தரின் போதனை)

'அவனன்றி ஓர் அணுவும் அசையாது' என்பது ஆப்த வாக்கியம். இறைவன் இச்சைப்படிதான் யாவும் நிகழ்கின்றன என்பதில் நமக்குத் திடநம்பிக்கை உண்டாகவேண்டும். அந்த நம்பிக்கையானது நம் மனதில் உறுதி பெற்றுவிட்டால் மனப்பூர்வமாக நாம் இறைவனிடம் சரணாகதி அடைந்து விடுகிறோம். நம்முடைய இச்சை என்பதற்குச் சிறிதும் இடம் தராது 'நன்றே செய்வாய்ப் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகம்!' என்று இறைவனுடைய இச்சைக்கு அனைத்தையும் விட்டுவிட வேண்டும். அப்பொழுது பூர்ண அமைதி நம் உள்ளத்தில் உண்டாகிறது.

நீ அடையும் பேறுகளுள் ஆத்மீகப் பேறே பெரியபேறு ஆகும். ஆத்மீகப் பேற்றைச் சுலபத்தில் அடைந்துவிட முடியாது. ஒரு நாளில் திடீரென்று ஞானோதயம் உண்டாகிவிடாது. பண்டைக்கால ரிஷிகள் ஆத்மஞானம் பெறுவதற்குக் கடுமையான தவம் புரிந்தார்கள் என்று நீ புராணங்களில் படித்திருக்கின்றாய் அல்லவா? உனக்குத் தெய்வபக்தியும், அசைக்கமுடியாத தெய்வ நம்பிக்கையும் இருக்குமானால் நீயும் கடுமையான தவத்தில் ஈடுபடுவாய். தவம் என்றால் நாடோடியாக லட்சியமில்லாது இங்கும் அங்கும் அலைந்து திரிவதன்று. ஒழுங்குப்பாடான இடைவிடாத ஜபம், தியானம், புலனடக்கம் ஆகியவைதான் உண்மையான தவமாகும்.

சரீரத்தை ஆரோக்கியமாகவும் உறுதியாகவும் வைத்துக்கொள்ள வேண்டும். சத்துள்ள உணவைக் குறித்தகாலத்தில் பசித்தபின் புசிப்பது ஆரோக்கியத்துக்குத் துணைபுரிகிறது. யாத்திரையாகப் பல இடங்களுக்குச் செல்லுகின்ற பொழுது சம்பூர்ண உணவை நீ பெற முடியாது. வீடுகளில் பிக்ஷையாக உணவு ஏற்கும் பொழுதும் சம்பூர்ண உணவு கிடைக்காது. ஆகையால் அப்படி உணவு ஏற்கின்ற காலத்தில் நீ நோய்வாய்ப்பட ஏதுவாகும். மேலும் உணவு தேடுவதிலேயே மிகுதியான காலத்தை நீ செலவழிக்க வேண்டிவரும். இதை எல்லாம் மனதில் கொண்டு ஆசிரமங்களும், தபோவனங்களும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. ஆங்கு வசிக்கும் சாதுக்களோடு நீயும் வாழ்ந்திருந்து அவர்களுக்குப் பணிவிடை செய்து வருவாயானால் உன் மனதிலுள்ள அழுக்குகள் நீங்கும். உன் மனது தூயது ஆகும். மனம் அழுக்குடையதாக இருக்கும் வரையிலும் அது ஸ்திரமாக இருக்காது. மனம் ஸ்திரமாக இல்லாவிட்டால் ஜபம் செய்வதற்கோ, தியானம் செய்வதற்கோ உனக்கு விருப்பம் உண்டாகாது. மனதில் ஸ்திரம் உண்டாகும் வரையில் சாதுக்களுக்குப் பணிவிடை செய்வதில் உன் மனதை ஈடுபடுத்தவேண்டும். அப்படிப் பணிவிடை செய்துகொண்டிருக்கும் பொழுதே நீ ஜபமும் செய்து வரவேண்டும். உபநிஷதம் கீதை போன்ற சாஸ்திரங்களை நாள்தோறும் ஓதுவது அவசியம். மனம் உருகித் தெய்வத்திடம் பிரார்த்தனையும் செய்து வர வேண்டும். அப்பொழுதுதான் உன் மனம் சாதனை புரிவதில் ஊக்கமுடையதாக ஆகும். ஸ்ரீ ராமகிருஷ்ணர் தேவியின் காட்சி பெறுவதற்காக எத்தகைய ஆழ்ந்த பிரார்த்தனை செய்தார் என்பதை நீ படித்திருப்பாய். தேவியின் காட்சி பெறுவதற்கு முன்பு முகத்தைத் தரையில் போட்டுத் தேய்த்துக்கொண்டு புலம்புவார். "அம்மா! நீ எனக்குக் காட்சி தரமாட்டாயா?" என்று தேவியின் முன் நின்று ஒன்றிய மனதுடன் பிரார்த்தனை செய்வார்.

மனப்பூர்வமாகக் கசிந்து பிரார்த்தனை செய்து பக்தியும் விசுவாசமும் வேண்டுமென்று இறைவனிடம் கேட்டால் இறைவன் பக்தியையும் விசுவாசத்தையும் உனக்குத் தருவார். நீ இங்ஙனம் பிரார்த்தனை செய். "இறைவா, ஆழ்ந்த பக்தியையும், அசைக்க முடியாத விசுவாசத்தையும் தருவதற்கு நீ அருள்புரிவாயாக. உன் தாமரைத் திருவடியை என் உள்ளம் யாண்டும் சிந்தித்துக் கொண்டிருப்பது ஆகுக. உன் தாமரைத் திருவடி என் இதயத்தில் இடம் பெறுவதாகுக. உன் தாமரைத் திருவடியை விட்டு வேறு விஷயங்களில் என் மனம் செல்லாது இருப்பதாகுக. புழுவாய்ப் பிறக்கினும் உன் அடி என் மனத்தே வழுவாதிருக்க அருள்

புரிவாயாக." கடவுள் அந்தர்யாமியாக இருக்கின்றார். உன் உள்ளத்தில் அவர் இருப்பதால் நீ செய்யும் பிரார்த்தனையை அவர் கேட்கின்றார். அப்பிரார்த்தனைக்கு அவர் அருள்புரிகின்றார். புனிதமான இடத்தில் அமர்ந்து ஒவ்வொரு நாள் காலையிலும் மாலையிலும் உன் இஷ்ட தெய்வத்தினுடைய மந்திரத்தை ஜபம் செய்து வா. எவ்வளவு எண்ணிக்கை அதிகம் ஜபம் செய்கின்றாயோ அவ்வளவுக்கும் நல்லது. ஜபம் செய்வதில் மனம் நிலைநின்ற பிறகு உன் இஷ்ட தெய்வத்தினுடைய வடிவத்தைத் தியானம்செய். அதன் பிறகு உனக்கு அமைந்த கடமைகளைப் பக்தியுள்ளத்தோடு தெய்வ ஆராதனையாகச் செய். உனக்கு அமைந்த கடமையைப்பக்தியோடும் முழுமனதோடும் செய்து வா. கடமையைக் கடமையுணர்ச்சியோடு மகிழ்ச்சியோடு எப்பொழுதும் செய்வது தவமாகும். தன்னலமற்ற, சிரத்தையோடுகூடிய கர்மம், பக்தி, ஜபம் ஆகியவற்றை மூன்று ஆண்டுகளுக்குத் தொடர்ச்சியாக நீ செய்து வருவாயானல் உன்னுடைய மனம் ஸ்திரமுடையதாகவும் தூய்மையுடையதாகவும் மாறி அமையும்.அதன் பிறகுதான் ஞானத்தைப் பெறவேண்டுமென்ற உன்னுடைய இருதய பூர்வமான விருப்பம் நிறைவேறும். மனத்தைத் தூய்மைப்படுத்துகின்றவளவுதான் நீ ஞானத்தைப் பெறமுடியும். கடவுள் காட்சி கிட்டியான பிறகு உனக்கு வேறு ஒன்றும் தேவை இல்லை. உன் உள்ளத்திலுள்ள காமக்குரோதாதிகளெல்லாம் கடவுள் காட்சி ஏற்பட்டதும் அழிந்து போகின்றன. நெருப்பு பொருள்களைப் பொசுக்குவது போன்று கடவுள் காட்சி உன் உள்ளத்திலுள்ள கீழ்மைகளை எல்லாம் பொசுக்கி விடுகின்றது. கடவுள் பூரணப் பொருளாவார். அவர் நிறை நிலையில் இருக்கிறார். விருப்பு வெறுப்பை எல்லாம் கடந்தநிலையில் இருக்கிறார். அவருடைய காட்சி உனக்குக் கிடைத்துவிட்டால் அவருடைய நிறைநிலை உனக்கும் சொந்தமாகிறது. அவருடைய காட்சியிலேயே உன் உள்ளம் யாண்டும் மூழ்கி இருக்க விரும்புகிறது. கற்கண்டு கட்டி சுவைத்தவனுக்குக் கருப்பட்டிக் கட்டி சுவையற்றதாகப் போய்விடுவதுபோன்று கடவுள்காட்சி கிடைத்துவிட்டால் உலக சுகங்கள் யாவும் சுவையற்றவையாகப் போய்விடுகின்றன.

உலகக் கிருத்தியங்களில் மூழ்கிப்போய் ஜபம், தியானம் செய்வதற்கு நேரமில்லை என்பவர் கூட்டத்தை நீ சார்ந்து விடாதே. ஜபம் தியானம் செய்வது தினந்தோறும் நிகழவேண்டும். உலகக்கிருத்தியங்களை நீ எப்படிச் செய்ய வேண்டும் தெரியுமா? உன் உடல் உலகக் கிருத்தியங்களில் ஈடுபட்டிருக்க உன் உள்ளம் தெய்வத்தைச் சிந்தனை செய்து கொண்டிருக்க வேண்டும். குடும்பத்தினர் உனக்குரியவர்கள் அல்லர் என்பதையும் அவர்கள் தெய்வத்துக்குச் சொந்தமானவர்கள் என்பதையும் நீ தெளிவாகத் தெரிந்துகொள். இறைவன் விருப்பப்படி உன் குடும்பத்தினர்களை அவர் நடாத்தட்டும். உன்னுடைய குழந்தைகளைத் தெய்வ சொருபங்களாகப் பாவித்து அவர்களைப் பராமரித்துவா. அவர்களுக்குச் செய்யும் பணிவிடை தெய்வத்துக்குரிய பணிவிடையாக உணர். நீ இரவில் தூங்கப்போகும் பொழுது அன்று செய்த காரியங்களின் பயன்களை எல்லாம் தெய்வத்திடம் ஒப்படைத்துவிட்டு அமைதியாகத் தூங்கு. பக்தியையும் விசுவாசத்தையும் இறைவா, எனக்குக் கொடு என்று பிரார்த்தனை செய். நீ உலகத்தில் இவ்விதம் வாழ்ந்து வருவாயாகில் உனக்கு அமைதியும் சாந்தமும் கிட்டும்.

வாழ்க்கையில் நீ எவ்வளவு முயன்றாலும் உன் திட்டப்படி காரியம் நிறைவேறத் தடை ஏற்படுவதைக் காண்பாய். நீ முயலாது இருக்கும்பொழுதே சில காரியங்கள் நிறைவேறிவிடுவதைக் காண்பாய். உன் சக்திக்குமேல் ஒரு சக்தி இருக்கிறதென்பதை நீ அதன் மூலம் உணரவேண்டும். தெய்வத்தின்மீது உண்மையான விசுவாசம் வைத்து அகங்காரமற்று நேர்மையாக முயன்றால் எல்லாம் மங்களமாக முடியும். "நீ இவ்வுலகத்துக்கு வந்துள்ளாய். உன் முதல் கடமை ஈசுவரனைக் காண்பதாகும். ஈசுவரனைக் கண்டபின் உலகக் காரியத்தில் ஈடுபட்டால் உனக்கு எவ்விதக் கஷ்டமும் வராது." இங்ஙனம் ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்ந்துள்ளார். புதிதாக ஓர் ஊருக்குச் செல்லுபவன் தங்குவதற்கு இடம் தேடிக்கொள்ள வேண்டும். அதன்பின் ஊர் சுற்றிப் பார்க்க வேண்டும். அதுபோன்று இவ்வுலகத்துக்கு வந்துள்ள நீ முதலில் ஈசுவரனைத்தேடி, பின் உலகக் காரியத்தில் பிரவேசிக்க வேண்டும்.

---

# ஆத்மா நித்தியமானதா?

( சுவாமி விவேகானந்தர் நியூயார்க் பத்திரிகை ஒன்றுக்கு எழுதிய கட்டுரை )

மகாபாரதம் என்னும் இதிகாசத்தில் ஒரு கதை இருக்கிறது. ஒரு சமயம் தர்மதேவதை யுதிஷ்டிரரைப் பலகேள்விகள் கேட்டது. அக் கேள்விகளுள் ஒன்று உலகத்தில் மிக அதிசய மானது எது? என்பதாகும். "மக்கள் தங்களைச் சுற்றிலும் ஒவ்வொரு வினாடியும் மரணம் நிகழ்ந்துகொண்டிருப்பதைப் பார்த்துக்கொண் டிருக்கிறார்கள். அப்படிக் கண்டுகொண்டிருப் பதற்கிடையில் தங்களுக்கு மரணம் இல்லை என்று உறுதியான நம்பிக்கை உடையவர் களாக இருக்கிறார்கள். இதுதான் ஆச்சரியத் துள் ஆச்சரியமானது" என்று யுதிஷ்டிரர் பதில் கூறினார். மானுட வாழ்வில் இது மிக வும் அதிசயமானதுதான். பல்வேறு சமயக் கொள்கை உடையவர்கள் பல்வேறு காலங் களில் இதைக் குறித்து விவாதங்கள் செய்திருக் கிறார்கள். புலன்களுக்கு உட்பட்ட வாழ்க்கைக் கும், புலன்களுக்கு அப்பாற்பட்ட வாழ்க்கைக்கு மிடையே உள்ள திரையைக் கிழித்தெறிய அறி வுக்கு இயலுவதில்லை. எவ்வளவோ முயற்சி செய்து முடிவுகாண இயலாதபொழுதிலும் தனக்கு மரணம் இல்லை என்பதை மனிதன் உறுதியாகப்பற்றி நிற்கின்றான்.

நாம் வாழ்வு முழுவதும் ஆராய்ச்சி செய்ய லாம். வாழ்வு, மரணம் என்பதைப்பற்றிய பிரச்னையை அறிவுகொண்டு தீர்க்கமுடிவ தில்லை. வாழ்வு, மரணம் உண்டா இல்லையா என்ற பிரச்னைக்கு நாம் முடிவுகாணத் தவறி விடுகின்றோம். வாழ்வு நிலையானது அல்லது நிலையற்றது என்பதைப்பற்றி நம்முடைய விருப் பம்போல் பேசலாம், எழுதலாம், போதனை செய்யலாம். வாழ்வு உண்டு என்ற கட்சி யையோ இல்லை என்ற கட்சியோ சேர்ந்து அதில் தீவிரவாதிகளாகலாம். நாம் நம்முடைய கொள்கைகளுக்கு நூற்றுக்கணக்கான பெயர் கள் கண்டுபிடிக்கலாம். நாம் கண்டுபிடிக்கின்ற கொள்கைகளுள் பின்னது முன்னதைவிடச் சிக் கல் உடையதாக இருக்கலாம். இப்பிரச்னைக்கு முடிவு கண்டுவிட்டதாக நம் அறிவில் ஏற்பட்ட மயக்கம் நீங்கிச் சற்று அமைதியுடையவர்களாக விருக்கலாம். சமயத்திலுள்ள மூடக்கொள்கை களையோ, விஞ்ஞான மூடக்கொள்கைகளையோ நம்முடைய சக்தி முழுவதையும் பயன்படுத்திப் பற்றி நிற்கலாம். ஆனால் இவ்வாறு நம் அறி வோடு சதா போராடுகின்ற விளையாட்டில் ஈடு பட்டு முடிவில் சோர்வடைகின்றோம்.

இயற்கையினுடைய மர்மத்தை அறிந்து கொள்ள முயல்வதற்கு முன் இவ்வுலகம் முழு வதும் எவ்வுண்மையின் அடிப்படையில் இருக் கிறது என்பதை அறிய விரும்புகிறோம். இவ் வுலகத்தின் நிலைத்த தன்மை உள்ளத்தின் நிலைத்த தன்மையைப் பொறுத்திருக்கிறது. அகவுலகம் புறவுலகம் ஆகிய இரண்டினுள் ஒன்று நிலையானது, மற்றொன்று நிலையற்றது என்று கூறும் கொள்கை நம்பத் தகுந்ததாகத் தோன்றலாம். அப்படிக் கூறுபவன் தன்னிடம் நிகழும் செயலையே கவனித்துப் பார்க்க வேண்டும். அகம் புறம் ஆகிய இரண்டுமில் லாது தன் உணர்வுப் பகுதியில் ஒரு செயலும் நிகழாது என்பதை அவனே அறியலாம். அகம் புறம் ஆகிய இரண்டும் அவசியமானவை. ஆனால் மனிதனுடைய மனம் பொறி புலன் களைக் கடந்து அதீதத்துக்குப் போகும் பொழுது அகம் புறம் இரண்டும் பிரிக்க முடி யாத ஒரு பொருளாகிவிடுகிறது. எல்லையற்ற வஸ்துதான் நாம் அறியும் உலகமாக இருக் கிறது. அவ்வெல்லையற்ற வஸ்துவே அறிய வேண்டிய பொருளாகிறது. காண்போனு டைய அழிவை எண்ணுவதற்கு முன் காணப் படும் பொருளின் அழிவை எண்ணக் கடமைப் பட்டிருக்கிறோம்.

இதுவரையிலும் ஏற்படாத சிரமம் ஒன்று இனி வரப்போகிறது. நான் என்னைச் சரீரமய மாகக் கருதுகிறேன். சாதாரணமாகச் சரீரத் துக்கு அப்பால் என்னைப்பற்றி நினைக்க முடி கிறதில்லை. என்னைச் சரீரமயமாக வைத்துக் கொண்டுதான் என்னுடைய இருப்பைப் பற்றிய கருத்து எனக்கிருக்கிறது. ஆனால் என் உடல் நிலையற்றது. பிரபஞ்சமும் நிலையற்றது. உடலும் பிரபஞ்சமும் ஓயாது மாறி அமைந்து கொண்டிருக்கின்றன.

சுதந்திரப்பொருள்தான் வாழ்வின் ஒவ்

வொரு படித்தரத்திலும் நமக்கு வழிகாட்டுகிறது. நம்முடைய இயக்கம் ஒவ்வொன்றையும் அதுதான் இயக்குகிறது. மானுட வாழ்வின் அனைத்துமாய் இருப்பது அச்சுதந்திரப் பொருளே. அறிவு ஆராய்ச்சி சுதந்திரப் பொருளை அகற்ற முயலுகிறது. அறிவு தனக் கெட்டிய பகுதியையெல்லாம் கைப்பற்றிப் பார்க்கிறது. காரண காரியம் என்பவற்றைக் கொண்டு இறுகக் கட்டிப் பிணைக்கிறது. இந்த முயற்சிகளையெல்லாம் கண்டு அச்சுதந்திரப் பொருள் நகைக்கிறது. நாம் அமைக்கின்ற காரணகாரியமென்கின்ற கட்டுகளுக்கெல்லாம் அது அப்பால் நிற்கிறது. எல்லைக்குட்பட்ட ஒன்று எல்லைக்குட்படாத ஒன்றைக் கொண்டுதான் தன்னை விளக்கிக்கொள்ள முடியும். சுதந்திரப்பொருள்தான் கட்டுண்டபொருளை விளக்க முடியும். காரண காரியத்திற்குட்படாத ஒன்றே காரண காரியத்திற்குட்பட்ட ஒன்றை விளக்க முடியும். இனி, சுதந்திரப்பொருள் எது என்னும் கேள்வியெழுகிறது. உடல் அல்லது உள்ளம் சுதந்திரப்பொருள் ஆகுமா? பிரபஞ்சத்திலுள்ள ஏனைய பொருள்களைப்போன்று உடலும் உள்ளமும் கட்டுண்டவைகள் என்பது வெளிப்படையாக விளங்குகிறது. எனவே அவை சுதந்திரப்பொருள்கள் ஆகா.

இப்பொழுது பிரச்னை முழுதும் இடர்ப்பாட்டுக்குரியது ஆகிறது. பிரபஞ்சம் முழுவதும் ஓயாது மாறியமையும் ஒன்றாகத்தான் இருக்கவேண்டும். காரண காரியமென்னும் கட்டுப்பாடு மாற்றமுடியாததாக இருக்கிறது. அதில் எப்பொருளுக்கும் சுதந்திரம் இல்லை. அப்படி இருந்தபொழுதிலும் இப்பிரபஞ்சம் நித்தியத்துவத்தையும், சுதந்திரமென்ற மயக்கத்தையும் உண்டாக்கிக்கொண்டே இருக்கிறது. அம்மயக்கத்தை அழிக்கமுடிவதில்லை. இக்கொள்கையை ஏற்றாகவேண்டும்; அல்லது மற்றொரு கொள்கையை ஏற்றாகவேண்டும். அஃதாவது: நம்மிடத்திலோ, பிரபஞ்சத்திலோ நித்தியமாகிய சுதந்திரப் பொருள் ஒன்று இருக்க வேண்டும். மனித மனத்தில் எழும் நித்தியமும், சுதந்திரமுமான பொருளைப்பற்றிய நம்பிக்கை வெறும் மயக்கமன்று. உண்மையைப் பொது விதிக்குக் கொண்டுவந்து விளக்குவது விஞ்ஞானத்தின் கடமையாகும். உண்மையின் ஒரு பகுதியை அழித்துவிட்டு மற்றொரு பகுதியை விளக்கும் எந்த விளக்கமும் விஞ்ஞான முறைக்கு ஒத்ததன்று.

சுதந்திரம் என்பது அவசியமான கருத்து. அதை மறுக்கும் எந்த விளக்கமும் பிழையுடைய விளக்கமாகும். சுதந்திரமும் நித்தியமுமான ஒரு பொருள் நம்மிடத்தில் இருக்கிறது என்பதை ஏற்றுக்கொள்வதுதான் நம்முடைய இயல்புக்கு ஒத்ததாகும்.

அச்சுதந்திரப் பொருள் சரீரம் அன்று; மனமுமன்று. சரீரம் ஒவ்வொரு நிமிஷமும் அழிந்துகொண்டே இருக்கிறது. மனம் ஒவ்வொரு நிமிடமும் மாறிக்கொண்டே இருக்கிறது. உடல் ஒரு சேர்க்கைப் பொருள். மனமும் அத்தகையதே. சரீரமும் மனமும் அத்தகைய அமைப்புடையதாக இருப்பதால் அவை மாறுதலுக்கு அப்பாற்பட்ட நிலையை அடையமுடியாது. சரீரமென்ற அந்தப் பருப்பொருளுக்கும் மனமென்ற சூட்சுமத்துக்கும் அப்பால் இருப்பது ஆத்மன். அதுதான் மனிதனிடமுள்ள நித்தியமான, சுதந்திரமான மெய்ப்பொருள். சரீரத்தின் ஊடும் எண்ணத்தின் ஊடும் சுதந்திரப்பொருள் உறைந்திருக்கின்றது. நாமரூபமாக வடிவெடுத்திருக்கின்ற பொருளிடையே கட்டுப்படாத தன்மையை அது உறுதிப்படுத்திக் கொண்டிருக்கிறது. அதன் அழியாத்தன்மைகளாகிய ஆனந்தம், சாந்தம், தெய்வீகம் அஞ்ஞானத்திரையையும் ஊடுருவிப் பிரகாசித்துக்கொண்டிருக்கின்றன. அவ் ஆத்மன்தான் உண்மையான மனிதன். பயமும் மரணமும் அற்ற சுதந்திரப் பொருள் அவ் ஆத்மனே.

புறச்சக்தி எதுவும் ஆதிக்கம் செலுத்த முடியாதபோதும் மாறுதலை உண்டாக்க முடியாதபோதும்தான் சுதந்திரமென்பது சாத்தியமாகும். எல்லாக் கட்டுப்பாடுகளையும், சட்டதிட்டங்களையும் பந்தங்களையும் கடந்திருக்கும்பொழுதுதான் சுதந்திரம் என்பது உரியதாகிறது. எது மாறாது இருக்கிறதோ அது சுதந்திரமாகவும் நித்தியமாகவும் இருக்கிறது. அச்சுதந்திரப் பொருள் அம்மாறாத பொருள் எல்லாக்கட்டுப்பாடுகளுக்கும் அப்பால் இருக்கிறது. பிறப்பு இறப்பு அற்றதாய், நித்தியமானதாய் யாண்டும் விளங்கிக்கொண்டிருப்பது ஆத்மாவாகும்.

# அருள் தாகம்

(ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் திருப்பராய்த்துறை தபோவனம் அந்தர்யோகத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு)

மனம் துயரத்திற்கு ஆளாகும்போது யோகத்திற்குத் தகுதியற்றதாகின்றது. சந்தோஷத்தில் நிலைபெற்று இருப்பவன்தான் யோகத்தில் முன்னேற்றமடைகின்றான். ஆனால் தெய்வத்தைக் குறித்துத் துயரப்படும்போது அது குற்றமாகாது. தெய்வத்தின் காட்சி கிட்டவில்லையே என்று வருந்துகின்ற அளவு அருள்தாகம் அதிகரிக்கிறது. "உன் அருள் பெறும் நாள் என்றென்றே வருந்துவனே" என்பது ஆப்த வாக்யம். அருளை நாடி வேண்டியவாறு வருந்தலாம். பொருளை நாடி வருந்துபவன் அழிந்து பட்டுப் போகின்றான். அருளைநாடி வருந்துகின்றவன் மேன்மையடைகின்றான். அருள் நாட்டம் மனிதனை எடுக்கின்றது. பொருள் நாட்டம் மனிதனைக் கெடுக்கின்றது. பொருள் நாட்டத்தில் விளையும் கேட்டை ஓர் உபமானக் கதை மூலம் ஸ்ரீ ராமகிருஷ்ணர் விளக்குகின்றார். அதில் நமக்குப் பெரிய பாடம் கிடைக்கின்றது.

அம்பட்டன் ஒருவன் ஓர் ஊரில் இருந்து மற்று ஓர் ஊருக்குப் போய்க்கொண்டு இருந்தான். போகும் வழியில் "உனக்கு ஏழு ஜாடி தங்கம் வேண்டுமா?" என்ற அசரீரி ஒன்றைக் கேட்டான். "ஆம் எனக்கு வேண்டும்" என்றான். "நீ வீட்டுக்குப்போ. ஏழு ஜாடி தங்கம் உன் வீட்டிற்கு அனுப்பப்பட்டு இருக்கிறது" என்று அசரீரி பகர்ந்தது. திரும்பி வீட்டிற்கு ஓடினான். வீட்டுக்குள் நுழைந்ததும் ஆங்கு ஏழு ஜாடிகள் இருப்பதைக் கண்டான். ஒவ்வொரு ஜாடியாகத் திறந்து பார்த்தான். ஆறு ஜாடிகளில் தங்கம் நிறைந்து இருந்தது. ஏழாவது ஜாடியில் மட்டும் கொஞ்சம் குறைவாக இருந்தது. அவன் எல்லையில்லாத மகிழ்ச்சியடைந்தான். எப்படியாவது ஏழாவது ஜாடியையும் நிரப்பிவிடவேண்டுமென்று தீர்மானித்தான். அவன் அரசனுக்கு ஊழியம் செய்து வந்தான். எனவே அவன் அரசனிடம் சென்று "தனக்குச் சம்பளம் போதவில்லை யென்றும் சம்பளத்தை இரண்டு மடங்கு ஆக்க வேண்டுமென்றும்" கேட்டுக்கொண்டான். தன்னிடம் வரும் வாடிக்கைக்காரர்களிடமும் இரண்டு மடங்கு பணம் வாங்கினான். அங்ஙனம் தனக்குக் கிடைக்கும் வரும்படியை இரண்டு மடங்காக்கினான். தன் குடும்பச் செலவைப் பாதியாகக் குறைத்தான். அப்படிச் சம்பாதித்த பணத்தையெல்லாம் தங்கமாக மாற்றிக் குறையுள்ள ஏழாவது ஜாடியில் போட்டான். அவன் போட்டுக்கொண்டே இருந்தான். ஆனால் ஜாடி நிரம்பவேயில்லை. நாள் ஏற ஏற அவன் உடல் இளைத்துக் கொண்டும் அவன் உள்ளம் கவலைக்கு உள்ளாவதுமாக இருந்தன. அவன் முகத்திலும் கவலைக்குறி தென்பட்டது. அரசன் அவனைப்பார்த்துக் கேட்டதாவது: "அடே! என்ன சமாச்சாரம்? உன் தேகம் இளைத்துக்கொண்டே வருகிறது. உன் முகத்தில் கவலைக் குறி தென்படுகிறது. யக்ஷனுடைய ஏழு ஜாடி தங்கம் உனக்குக் கிடைத்து விட்டதா?" "பிரபு! அந்த விஷயம் உங்களுக்கு எப்படித் தெரியும்?" என்றான் அம்பட்டன். "உன்னுடைய முகமே அதைக் காட்டித் தருகின்றது. நீ எத்தனை ஜன்மங்கள் பாடுபட்டுத் தேடிப் பொருளை அந்த ஜாடியில் போட்டாலும் அது நிரம்பாது" என்றார் அரசன். "நான் இனி என்ன செய்வது?" என்று கேட்டான் அம்பட்டன். "யக்ஷனிடம் கூறி அந்த ஜாடிகளை எடுத்துக் கொண்டு போகும்படி சொல்லிவிடு" என்றார் அரசர். அம்பட்டனும் அங்ஙனமே பிரார்த்தனை செய்ய ஜாடிகள் எல்லாம் மாயமாய் மறைந்து போயின. அம்பட்டனுடைய கவலையும் தொலைந்தது. யக்ஷன் ஜாடித் தங்கம் வந்ததால் அவ் அம்பட்டனுக்கு உழைத்ததும், கவலைப்பட்டதும்தான் மிச்சமாயின. யாரெல்லாம் பொருளில் பேராசை வைத்திருக்கிறார்களோ அவர்கள் யக்ஷனுடைய ஏழு ஜாடி தங்கத்தைப் பெற்றவர்கள் ஆகின்றார்கள். பொருள் நாட்டம் பொல்லாதது. அது மனிதனுடைய சொரூபத்தைத் தேய்க்கிறது. இது வாழ்க்கையில் நாம் கற்றுக்கொள்ள வேண்டிய பாடம் ஆகும்.

இனி அருள்நாட்டமோ மனிதனை எடுக்கின்றது. மனிதன் எவ்வளவுக்கெவ்வளவு அருள் நாட்டமுடையவனாக இருக்கின்றானோ அவ்வளவுக்கவ்வளவு அவன் சாதனத்தில் மேல்

நிலையை அடைகின்றான். அருள் நாட்டத்தில் மனிதனுடைய சொரூபம் திருந்தியமைகின்றது. அருள்நாட்டம் பிடித்து இருக்கின்றவன் பாக்கியவான். ஈண்டு நம் பழைய வாழ்க்கைப் பண்பை ஞாபகத்திற்குக் கொண்டு வருவது அவசியம். பழைய பண்பில் ஊறியிருந்த இந்தியர்கள் பொருள் சம்பாதித்தார்கள். அப் பொருளைக்கொண்டு சமுதாய வாழ்க்கையை நன்கு கொண்டு செலுத்தினார்கள். அறம், பொருள், இன்பம், வீடு என்னும் புருஷார்த் தங்களில் பொருளுக்கும் அனுமதியுண்டு. பொருளில் ஆசை வைப்பதற்கு ஓரளவுதான் அனுமதியுண்டு. அதில் பேராசை வைத்துப் பைத்தியம் பிடித்தவன்போன்று ஒருவன் ஆகி விடுவானாகில் அவன் அழிந்துபட்டுப்போவான். உலக வாழ்க்கை வாழ்கின்றவர்கள் பொருளை முறையாகச் சம்பாதித்து அதை முறையாகப் பயன்படுத்தலாம். வரம்புக்குட்பட்ட பாங்கில் பொருளாசையை நிறைவேற்றலாம். நமக்குப் பொருள் அடிமையாக இருக்கவேண்டுமே யொழிய நாம் பொருளுக்கு அடிமையாக இருக் கக் கூடாது. ஆசைக்கு நாம் அதிபதியாக இருக்கவேண்டும். ஆசைக்கு நாம் அடிமை களாக இருக்கக் கூடாது. ஆசைக்கு அடிமைப் படாத வாழ்க்கையின் மூலமாகத்தான் யோகத் தில் மேல்நிலைக்குப்போவது சாத்தியமாகும்.

இன்றைக்கு மேல்நாட்டில் நாம் எதைக் காண் கின்றோம்? மேனாட்டு மக்களிடையே பதை பதைப்பையும் பயத்தையும் உழைப்பையும் காண்கின்றோம். ஓய்வுக்கு அவர்களுக்கு நேர மில்லை. அவர்கள் அல்லும் பகலும் உழைத் துப் பாடுபடுகிறார்கள். பொருளை ஏராளமாகச் சம்பாதிக்கின்றார்கள். அவர்களுக்குத் தூக்கம் பிடிப்பதில்லை. தூக்க மாத்திரை சாப்பிட் டுத்தான் தூங்குகின்றார்கள். வாழ்க்கையில் அவர்கள் அடைந்து வரும் நஷ்டம் அவர் களுக்கு விளங்குவதில்லை. யோகத்தைச் சரி யாகப் பயின்று யோகத்தில் முன்னேறி வந் தால் நாம் அடைகின்ற லாபத்தைப் பகவான் கீதையில் இங்ஙனம் பகர்கின்றார்.

यं लब्ध्वा चापरं लाभं मन्यते नाधिकं ततः ।
यस्मिन्स्थितो न दुःखेन गुरुणापि विचाल्यते ॥

**யம் லப்த்வா சாபரம் லாபம் மன்யதே நாதிகம் தத:|**
**யஸ்மின்ஸ்திதோ நது: கேன குருணாபி விசால்யதே||**

யோகத்தைப் பெற்றான பிறகு அதற்குமேல் பெறவேண்டியது ஒன்றுமில்லை. யோகத்தைப் பெற்றவன் நிறை நிலை எய்தியவன் ஆகின்றான். அருள்நாட்டம் கொண்டு யோகநெறி நிற்பவன் யோகம் பூர்த்தியாகின்றபொழுது நிறைநிலை எய்துகின்றான். அப்பொழுது நித்திய திருப்த னாக இருக்கின்றான். நிறை நிலை நம்மிடம் இருக்கிறது. அஞ்ஞானத்தால் நாம் அதை அறியாதவர்களாகவிருக்கின்றோம். மனிதன் மூன்று நிலைகளில் இருக்கின்றான். அம்மூன்று நிலைகளுள் உச்சநிலையில் இருப்பவன் யோகி ஆகின்றான். போகி இடைநிலையில் இருக்கின் றான். ரோகிகடைநிலையில் இருக்கின்றான்.நோய் என்னும் துன்பத்தை அனுபவித்துக்கொண் டிருப்பவன் கடைநிலையில் இருக்கின்ற ரோகி யாவான். இடைநிலையில் இருக்கின்ற போகி சுகத்தையும், துக்கத்தையும் மாறி மாறி அனுப வித்துக்கொண்டிருக்கின்றான். யோகியானவன் பரிபூர்ண நிலையை அடைந்து நித்திய திருப்த னாகவிருக்கின்றான். அன்னதானம் செய்வதைச் சிறப்பாகச் சொல்லுகின்றார்கள். உணவைத் தவிர மற்றப் பொருள்களை மனிதனுக்கு வேண் டிய அளவு தரமுடியாது. மற்றப் பொருள்களை எவ்வளவு தந்தாலும் போதாது என்னும் குறை இருக்கத்தான் செய்யும். எத்தகைய பெருண் டிக்காரனாக விருந்தாலும் வேண்டிய அளவு உண்பானேயொழிய அதற்குமேல் உண்ணமுடி யாது. அன்னதானம் ஒன்றைத்தான் ஒருவ னுக்குத் திருப்தி உண்டாகும் வரையில் செய்ய முடியும். ஆனால் அது தாற்காலிக மாகத்தான் திருப்திபண்ணும். சில மணிகளுக் குப் பிறகு உண்டவனுக்குப் பசி வந்துவிடு கிறது. சுஷுப்தி அல்லது ஆழ்ந்த உறக்கத் தில் நாம் திருப்தி உடையவர்களாகவிருக்கின் றோம். ஆழ்ந்த உறக்கத்தில் நாம் பெற்றுள்ள பிரபஞ்ச சம்பந்தமான அனைத்தையும் ஒதுக்கித் தள்ளிவிடுகின்றோம். கனவற்ற உறக்கத்தில் பணக்காரன் பணம் படைத்திருப்பதை மறந் திருக்கின்றான். ஏழை தன்னிடத்திலுள்ள ஏழ் மையை மறந்திருக்கின்றான். கற்றவன் கற்ற கல்வியை மறந்திருக்கின்றான். பேராசைக் காரன் பேராசையை ஒதுக்கியவனாக இருக் கின்றான். பெரிய அந்தஸ்திலிருப்பவன் அந்த அந்தஸ்தை ஒதுக்கியவனாக இருக்கின்றான்.

சுஷுப்தி அவஸ்தைதான் ஜீவர்களுக்கு மூல நிலை ஆகின்றது. எல்லா ஜீவர்களும் அந்நிலையில் தங்களுடைய யதார்த்த நிலையாகிய பூரணத்தை எட்டி அதில் திருப்தி அடைந்தவர்களாகவிருக்கின்றார்கள். கனவற்ற உறக்கத்தைத் துறக்க யாரும் ஆயத்தமாக இல்லை. அதற்கு நிகரான பேறு வேறு எதுவுமில்லை.

அத்தகைய பேறுபெற்றவர்களாக நாம் அனைவரும் இருக்கின்றோம். அப்பேற்றினை நாம் அஞ்ஞான நிலையில் பெற்று வருகின்றோம். விழிப்பு நிலையில் நாம் அதைப் பெறுகின்ற பொழுது நம் ஜீவிதம் பூர்த்தியாகின்றது. எதைப்பெற்றால் மேற்கொண்டு எதையும் பெற வேண்டியதில்லையோ அதைப் பெறுவது யோகம் ஆகும். ஜாக்ரதா நிலையில் அதைப்பெறுகின்றபொழுது பரமானந்தம் அடைகின்றோம். சுகபிரம்மம் சரீரம் எடுத்திருந்ததற்கிடையில் அப்பேரானந்தப் பெருநிலையில் இருந்தார். வியாசருடைய புதல்வர் சுகபிரம்மம் ஆவார். பிரம்ம ஞானத்தோடு அவர் பிறந்தார். பிரம்ம ஞானத்தில் மூழ்கியிருந்ததற்கிடையில் அவர் சரீரம் வளர்ந்து வந்தது. சரீர உணர்ச்சியை முற்றும் தாண்டிய நிலையில் நித்திய திருப்தராக இருந்தார்.

வியாசர் தம் புதல்வனாகிய சுகபிரம்மத்தை ஞானத்துக்காக ஜனகமஹாராஜாவிடம் ஐதிகத்திற்கு ஒப்ப அனுப்பி வைத்தார். ஜனக மஹாராஜா உலகாயதமாகிய ராஜ்ய பரிபாலனத்தில் ஆழ்ந்து ஈடுபட்டு இருந்தார். அதற்கிடையில் அவர் பிரம்மஞானத்தில் மூழ்கியவராக இருந்தார். அவருக்கு விதேகர் என்ற பெயரும் உண்டு. தேகத்தில் வசித்திருப்பதற்கிடையில் தேகவுணர்ச்சியைத் தாண்டிய நிலையில் ஜனக மஹாராஜா இருந்தார். அந்த நிலை அடைவது நம் அனைவருடைய குறிக்கோளாகும்.

உடலில் வாழ்ந்திருப்பதற்கிடையில் நாம் எவ்வளவுக்கெவ்வளவு உடல் ஞாபகத்தைத் தாண்டியவர்களாகின்றோமோ அவ்வளவுக்கவ்வளவு சாதனையில் மேலே போகின்றோம். உடல் ஞாபகத்தை வளர்க்கின்றவளவு நாம் கீழ்மையுறுகின்றோம். உடல் ஞாபகத்தைத் தாண்டி மனதை அதீதத்தில் செலுத்துகின்ற வளவு நாம் மேன்மையுறுகின்றோம். நாம் யோகத்தில் நிலைபெற்று வரவர உடல் நிழல் போன்று சொரூபத்தைச் சார்ந்திருக்கின்றது. சுகபிரம்மம் உடல் உணர்வைக் கடந்தவராக மிதிலைக்கு வந்தார். சுகர் தம்மிடம் வருவதை ஜனக மஹாராஜா அறிந்தார். "ஒரு ரிஷி புத்திரன் வருகின்றான். அவனை வாயிலில் நிறுத்தி வைத்திருங்கள். அவனை உள்ளே அனுமதிக்க வேண்டாம்" என்று ஜனக மஹாராஜா உத்தரவு பிறப்பித்தார். அவர் உத்தரவுப் படி சுகபிரம்மத்தை வாயிலில் நிறுத்தி வைத்து விட்டார்கள். மூன்று நாட்கள் அவரை யாரும் கவனிக்கவில்லை. மூன்று நாட்களும் அவர் வாயிலிலேயே நின்று கொண்டிருந்தார். நான்காவது நாள் ஜனக மஹாராஜா மந்திரி பிரதானிகளோடு தாமே நேரில் போய் ராஜ ரீதியில் மரியாதை தந்து சுகரை வரவேற்றார். சுகபிரம்மம் தம்மை யாரும் கவனியாது விட்ட பொழுது மனக்கிலேசம் எதுவுமடையவில்லை. அரசரே நேரில் வந்து ராஜரீதியோடு வரவேற்ற போது அதைக் குறித்து அவர் மன மகிழ்ச்சியுமடையவில்லை. இரண்டு நிலைகளையும் சமமாக அவர் ஏற்றுக்கொண்டார். நிந்தை, ஸ்துதி, அவமானம், மானம், நஷ்டம், லாபம் ஆகிய யாவும் சுகபிரம்மம் போன்றவர்களுக்குப் பொருளற்றவை. சுகபிரம்மம் அதீதத்தில் நிலைபெற்றவராக இருந்தார். ஆத்ம சொரூபத்தில் நிலைபெற்று இருக்கிறவர்களுக்கு எத்தகைய உலகத் துக்கம் வந்தாலும் அதனால் அவர்கள் பாதிக்கப் படுவதில்லை. பெரும் துயரத்திற்கு ஏதுவான சூழ்நிலையில் அவர்கள் வைக்கப்பட்டாலும் மன நிலையில் அவர்கள் அச்சூழ்நிலையில் அகப்படாதவர்களாக இருக்கிறார்கள்.

மகாபாரதத்தில் யுதிஷ்டிரருடைய நிலையை எடுத்துக்கொள்ளலாம். வனவாசம் என்னும் பிரதிகூலமான சூழ்நிலையைத் தவத்திற்கேற்ற அனுகூலமான சூழ்நிலையாக யுதிஷ்டிரர் மாற்றியமைத்தார். பாண்டவர்கள் வனவாச காலத்தில் தவத்தில் ஆழ்ந்து ஈடுபட்டார்கள். தவத்தில் அவர்கள் மேல்நிலைக்கு வந்தார்கள். வனவாச வாழ்க்கை பூர்த்தியாவதற்கு நான்கு அல்லது ஐந்து நாட்கள் பாக்கியிருந்தபொழுது அவர்களுடைய வாழ்க்கையில் ஒரு சம்பவம் நிகழ்ந்தது. முனிவர் ஒருவர் தீ கடைவதற்காக அரணிக்கட்டை ஒன்று வைத்திருந்தார். அதை ஒரு மான் தூக்கிக்கொண்டு சென்றது.

அவ்வரணிக் கட்டையை மானிடமிருந்து பெற்றுத் தருமாறு முனிவர் பாண்டவர்களைக் கேட்டுக் கொண்டார். ஐவரும் மான் பின் ஓடினர்கள். மான் அவர்களுக்கு அகப்படாது அவர்கள் கண்ணிலிருந்து மறைந்துவிட்டது. ஐவரும் சோர்ந்துபோய் ஓரிடத்தில் உட்கார்ந்தார்கள். பன்னிரண்டு ஆண்டுகள் தவம் செய்ததில் தாங்கள் முன்னேற்றமெதுவும் அடையவில்லை என்ற முடிவுக்கு வந்தார்கள். தாகத்தைத் தணித்துக் கொள்வதற்காகத் தண்ணீர் கொண்டு வருவதற்கு ஒருவர்பின் ஒருவராகச் சென்று நால்வரும் நச்சுப்பொய்கையில் ஜலம் அருந்தி ஆங்குச் செத்துக்கிடந்தார்கள். கடைசியாகத் தர்மர் ஆங்குப் போனார். நால்வர் நிலையையும் பார்த்தார். வாழ்வில் அதற்கு நிகரான கஷ்டதிசை வரமுடியாது. நால்வர் செத்தது தம் உயிரே போனதற்கு நிகராகும். அத்தகைய கஷ்டதசையிலும் சஞ்சலமடையாத மனநிலையில் யுதிஷ்டிரர் இருந்தது தவத்தின் விளைவாகும். சொரூபத்தில் உறுதியாக நிலைபெற்று இருக்கின்றவன் மலைபோன்ற துக்கம் வந்தாலும் அவன் அசையாது இருந்தபடி இருக்கின்றான். யுதிஷ்டிரர் அதற்குச் சான்று ஆகின்றார்.

ஜனகர் சுகபிரம்மத்தை அழைத்துச்சென்று அவருடைய மனநிலையை மேலும் பரிசோதித்தார். ஜனகர் சுகர் கையில் பால் நிறைந்த கிண்ணத்தைக்கொடுத்துச் சபையைச் சுற்றி வரும்படிகூறினார். சுகர் பாலைக் கையில் வாங்கியதும் துளி பாலாவது கீழே சிந்தாமல் சபையைச் சுற்றி வந்து பால் நிறைந்த கிண்ணத்தை வைத்தார். சபையைச் சுற்றி வரும்பொழுது அவருடைய மனதைக் கவருவதற்குக் கவர்ச்சிகரமான ஆடல் பாடல்கள் நிறைந்த காட்சிகளை அமைத்துவைத்திருந்தார்கள். ஆனால் அவற்றில் சிறிதேனும் மனதை ஈடுபடுத்தாது சுகர் தமக்குத் தந்த கடமையை வெற்றிகரமாகச் செய்து முடித்தார். தந்தை அவருக்கு எந்த உயர்ந்த நிலையைப் புகட்டினரோ அந்நிலைதான் முடிந்தநிலை. அதற்கு மேல் அறிந்துகொள்வதற்கு ஒன்றுமில்லை. இங்ஙனம் ஜனகர் சுகபிரம்மத்திற்குப் புகட்டினர். நம்முடைய சுவானுபூதி, சாஸ்திரம் கூறுகின்ற முடிந்தநிலை, குரு பகர்வது ஆகியயாவும் ஒத்து இருக்கும். சாஸ்திரப் பிரமாணம், யுக்திப்பிரமாணம், அனுபவப் பிரமாணம் ஆகிய மூன்றினுள் அனுபவப்பிரமாணமே முடிந்த நிலையாகும்.

சாஸ்திரம், யுக்தி, அனுபவம் ஆகிய மூன்று பிரமாணங்களுள் இடைக்கால இந்தியா அனுபவப் பிரமாணத்தை ஒதுக்கி விட்டது. சாஸ்திரப் பிரமாணத்தை முன்னிலையில் வைத்தது. யுக்திக்கு ஓரளவு இடம் தந்தது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் மத்தியில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் தோன்றி வந்தார். அவர் சாஸ்திரத்தைக் கையில் தொடவில்லை. அருள் விஷயத்தில் பித்தம் பிடித்தவராக ஆழ்ந்து சாதனையில் ஈடுபட்டார். சாதனையில் ஈடுபட ஈடுபட அவர் கொண்டிருந்த அருள் தாகத்துக்கு ஏற்ப உள்ளம் தெளிவடைந்து வந்தது. வாழ்க்கையில் என்ன செய்யவேண்டும் என்பதை அவர் உள்ளமே அவருக்கு விளக்கிக்காட்டியது. உள்ளத்தின்கண் வீற்றிருக்கின்ற தெய்வம் அருள் தாகம் உடையவர்களுக்கு வழிகாட்டியாக வந்து அமைகின்றது. பார்த்தசாரதி தத்துவம் இதுவேயாம். பார்த்தனுக்குச் சாரதியாக விருந்த பரமாத்மா நம் அனைவருடைய உள்ளத்திலும் சாரதியாக இருந்து நம் அனைவருக்கும் வழிகாட்டிக்கொண்டிருக்கின்றார். நாம் தீவிரமாகச் சாதனை செய்வோமேயானால் நம் உள்ளத்தில் உள்ள பரமாத்மா நமக்கு நல்வழி காட்டித் தருகிறார். புறத்தில் குருவாக வந்து அவர் வழிகாட்டுவதைவிட அகத்தில் குருவாக விருந்து அவர் வழிகாட்டுவது என்றைக்கும் தவறிப் போவதில்லை. மகாத்மா காந்தி அதை 'Inner Voice' என்று பகர்ந்தார். பொதுப்பட நாம் அதை மனச்சாட்சி என்று கூறுகிறோம். நாம் செய்யும் செயல்களுக்கெல்லாம் சாட்சியாக நம் உள்ளிருக்கும் ஆத்மா இருந்துகொண்டு நமக்கு நல்வழியைக் காட்டித்தருகின்றார். அவ்வழியை நாம் சரியாகப் பின்பற்றினல் மேல் நிலையை அடையலாம்.

நாம் அடைய வேண்டியதை எல்லாம் அடைந்தான பிறகு அதற்கு மேல் பெறவேண்டியது ஒன்றுமில்லை என்ற மனநிலை உண்டாவதுதான் முடிந்த நிலையாகும். சுகபிரம்மம் அதற்குச் சான்றாக இருந்தார். அண்மையில் தோன்றிய ஸ்ரீ ராமகிருஷ்ணர் அதற்குச் சான்றாக இருந்தார். சான்றோர்கள் எல்லாரும் அதற்குச் சான்றாக இருந்தார்கள். அருள் தாகத்தைக்

குறித்து ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்ந்துள்ளதாவது: "சூரியோதயம் வருவதற்கு முன்பு கீழ்த்திசை முதலில் வெளுத்து வருகிறது. பிறகு ஆங்குச் செவ்வானம் உண்டாகின்றது. அருணன் உதயமாகிறான் என்பதற்கு அவ்விரண்டும் அறிகுறிகளாகும்." அதே விதத்தில் ஆத்மசாதனம் புரியவேண்டும் என்ற ஆசை உள்ளத்தில் எழுந்து சாதனத்தில் தீவிரமாக ஈடுபடுபவன் அனுபூதிமான் ஆவான். அருள்தாகமும், தீவிரமான ஆசையும், தீவிரமான சாதனையும் அனுபூதிமானாவதற்கு முன் அறிகுறிகளாகின்றன.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் அருள்நாட்டம் உடையவராகவிருந்தார். நாள்தோறும் கடவுள் வழிபாடு செய்துவந்தார். ஆலயத்தில் சூரிய அஸ்தமனவேளையில் தீபாராதனைக்காக மணி அடிக்கும். அம்மணியோசையைக் கேட்கின்றபொழுது "தாயே! என்னுடைய அற்ப ஆயுளில் மேலும் ஒரு நாள் வீணாகப் போய்விட்டது; உன் அருளுக்குப் பாத்திரமாகாத பரிதாபகரமான நிலையில் இருக்கின்றேன்" என்று முகத்தைத் தரையில் தேய்த்துக்கொண்டுகதறிப்பதறி அழுவார். அது அருள்தாகத்தின் உச்சநிலையாகும். அருள்தாகம் கொண்டிருப்பவர்கள் அனைத்தையும் அடையப் பெறுவார்கள். யாரொருவரிடத்தில் பரமஹம்சரிடம் இருந்தது போன்ற அருள்தாகம் இருக்கிறதோ அவர் சாதனத்தில் மேல்நிலைக்குப்போவதுமுற்றிலும் சாத்தியம். ஸ்ரீ ராமகிருஷ்ணர் சாதனத்தில் எவ்வளவு மேலே சென்று அனுபூதிமான் ஆனார் என்பது நமக்கெல்லாம் பாடமாக வந்து அமைகின்றது.

கடவுள் நாட்டம் உடையவர்களாக ஆவதே வாழ்க்கையின் குறிக்கோளாகும். சுவானுபூதி பெறுவதுதான் சாதனத்தின் முடிந்த நிலையாகும். க்ஷீணதிசை அடைந்த இந்தியா சாஸ்திரப் பிரமாணத்தை முன்னிலையில் வைத்தது. யுக்திக்கு ஏகதேசம் இடம் தந்தது. அனுபவப் பிரமாணத்தை மறந்துவிட்டது. அந்நிலையை ஸ்ரீ ராமகிருஷ்ணர் திருத்தி அமைத்தார். அனுபவப் பிரமாணத்துக்கு முக்கியத்துவம் தந்தார். அதை யுக்திபூர்வமாக விளக்கிக் காட்டினார். அவருடைய அனுபவம் சாஸ்திரத்துக்கு முற்றும் ஒத்திருந்தது. அவர் போன்று நாமும் அனுபவ ஞானம் பெறவேண்டும். அவர் சாதனத்தில் கண்ணும் கருத்துமாக ஈடுபட்டிருந்தது போன்று நாமும் சாதனையில் ஈடுபடவேண்டும். அவர் அருள்தாகத்தை வளர்த்தது போன்று நாமும் அருள்தாகத்தை வளர்க்கவேண்டும். சாஸ்திரத்துக்கு எவ்வளவு இடம் தரவேண்டும், யுக்திக்கு எவ்வளவு இடம் தரவேண்டும் என்பதை எல்லாம் அவர் விளக்கிக் காட்டியுள்ளார். சாஸ்திரம் இப்படிச் சொல்கிறது, அப்படிச் சொல்கிறது என்று பேசுவது வாய்ப்பேச்சுக்கு உதவுமே ஒழிய காரியத்துக்கு உதவாது. சாஸ்திரங்களைக் கற்பதனால் மட்டும் ஒருவன் முடிந்த நிலையை அடைந்துவிட முடியாது. அனுபூதிமானாவதே முடிந்த நிலையை அடைவதற்கு உபாயமாகும்.

அருள் தாகத்தை வளர்ப்பதற்கு ஏகாந்தத்திற்குச் சென்று கடவுளைக் குறித்துக் கண்ணீர் விட்டுப் பிரார்த்தனை செய்யவேண்டும். மனமே, இன்றிருந்து நாளை அழியும் பொருளைக் குறித்து ஆசைப்படாதே என்று மனதுக்கு உபதேசிக்கவேண்டும். மனம் உருகிப் பண்ணுகிற பிரார்த்தனைக்கு இறைவன் செவி சாய்க்கிறார். அருள்தாகமெடுத்துக் கண்ணீர் சிந்தி பிரார்த்தனை பண்ணவேண்டும். உள்ளத்தில் இருக்கும் அழுக்குகளை அக்கண்ணீர் கரைத்து விடுகிறது. 'அழுதால் உன்னைப் பெறலாமே' என்ற ஆன்றோர் வாசகம் அருள்தாகம் உடைய அன்பர்களின் அனுபவத்தை எடுத்துக் கூறும் வாசகமேயாம்.

விவேகானந்தர் பகர்ந்துள்ளதாவது: "உபநிஷதங்கள் உண்மையைப் பகர்கின்றன. அவைகள் என் அனுபவத்தை விளக்குகின்றன." நம் அனுபவமும் உபநிஷதக் கோட்பாடுகளுக்கு ஒத்ததாக அமையவேண்டும். உபநிஷதங்கள் பற்றிப் பிரமாதமாகப் பேசிக்கொண்டிருப்பதன் மூலம் எல்லாம் அடைந்துவிட்டதாக எண்ணிவிடக் கூடாது. அவ்வுண்மைகளை எல்லாம் ஸ்ரீ ராமகிருஷ்ணர், விவேகானந்தர் போன்று நம் அனுபவத்துக்குக் கொண்டுவர வேண்டும். கடவுள் வழிபாடு செய்து அவ்வுண்மைகளையெல்லாம் அனுபவ வாயிலாக அறிவதற்கே நாம் மானுடர்களாகப் பிறந்திருக்கின்றோம். உபநிஷத உண்மைகளை அனுபூதி வாயிலாக அறியும்பொழுதுதான் நம் வாழ்வு பூர்த்தி அடைகின்றது. (தொடரும்)

# ஸ்ரீ லலிதா வியாக்கியானம் - 125

**719. गणाम्बा கணும்பா**—கணங்களுக்குத் தாயார்.

சிவனுரைப் பின்பற்றுகின்ற பைரவர்கள் முதலாயினேர் கணங்கள் அல்லது திருக்கூட்டங்கள் என அழைக்கப்படுகின்றனர். பரிணுமத்தில் இந்தக் கணங்கள் பல படித்தரங்களில் இருக்கிருர்கள். பக்தியின் விளைவாகப் பித்தர்கள் போன்றும், பேயர்கள் போன்றும், பாலர்கள் போன்றும் பலபேர் இருக்கின்ருர்கள். சிவத்தொண்டில் ஆற்றல் மிகப்படைக்கப் பெற்ற வீரர்கள் பலர் இருக்கின்றனர். அத்தகைய வீரர்களுள் வீரபத்ரன் தலையானவனுக இலங்குகின்ருன். இவர்களனைவருக்கும் சிவனுர் தந்தையாயிருப்பது போன்று அம்பிகை தாயாராக இலங்குகின்ருள். சிவகணங்களைச் சிவ சேவையிலும், சிவ பக்தியிலும், சிவ ஞானத்திலும் ஈடுபடுத்தித்தன் செல்வர்களைப் பேண அம்பிகை கடமைப்பட்டவளாக இருக்கிருள். கருணுகர முகங்கொண்டு அம்பிகை எண்ணிக்கையில் அடங்காத அத்தனைபேர்களையும் பேணி வருகின்ருள்.

இந்தக் கணங்களுக்கெல்லாம் தலைவனுய் இருப்பவன் கணபதி அல்லது கணேசன். கணபதிக்கு அம்பிகை தாயாயிருப்பதால் அவளுக்குக் கணும்பா என்னும் பெயர் வந்துள்ளது. கணநாதன் கணங்களை நல் வழியில் நடாத்தத் தீர்மானித்திருக்கிருன். நல்வழியில் செல்லுகிறவர்களுக்கு உதவிபுரிவதும் வழி பிரண்டு போகிறவர்களுக்கு முட்டுக்கட்டை போடுவதும் கணபதியின் கடமை. ஆதலால் அவனுக்கு விக்னேஸ்வரன் என்னும் பெயர் வந்துள்ளது. எதற்குத் தடைபோடுவது எதற்குத் தடை நீக்குவது என்னும் கோட்பாடுகளையெல்லாம் கணபதி தன் தாயாரிடமிருந்து கற்றுக்கொள்ளுகிருன். அவனை முறையாகப் பேணுவதின் வாயிலாகப் பிரபஞ்சத்தின் நடைமுறையையே அம்பிகை ஒழுங்குப்பாட்டில் வைத்திருக்கிருள். ஆதலால் அவள் கணும்பா என்னும் பெயர் பெற்றுள்ளாள்.

**720. गुह्यकाराध्या குஹ்யகாராத்யா**—தேவகணங்களில் ஒரு சாரார் குஹ்யக்காரர்கள் என அழைக்கப்படுகின்றனர். அவர்கள் எச்செயலிலும், எவ்விடத்திலும் முன்னணிக்கு வருவதில்லை. தங்களை விளம்பரம் பண்ணிக்கொள்ளாது யாண்டும் பின்னணியிலேயே இருக்கின்றனர். குபேரனுடைய பணிவிடைக்காரர்களும் குஹ்யக்காரர்கள் என அழைக்கப்படுகின்றனர். இத்தகைய குஹ்ய கணங்களின் பிரதிநிதியாகப் பணம் திரட்டுகிறவர்கள் ஒரு கூட்டத்தார் உலகிலிருக்கின்றனர். செல்வத்தைச் சேகரிப்பதே வாழ்க்கையில் அவர்கள் கொண்டுள்ள குறிக்கோளாகும். தாங்கள் சேகரித்துள்ள செல்வம் எவ்வளவு என்பதை அவர்கள் விளம்பரம் பண்ணமாட்டார்கள். தங்கள் சேமிப்பை யாண்டும் ரகசியமாகவே வைத்திருப்பார்கள். தங்களுடைய தேட்டை மேலும் மேலும் வளரவேண்டுமென்று ஏகாந்தத்தில் அவர்கள் அன்னை பராசக்தியை ஆராதிக்கின்றனர். அவர்கள் பண்ணுகிற ஆராதனையையும் அவர்கள் விளம்பரம் பண்ணுவதில்லை. வாழ்க்கையில் யார் எதைக் குறிக்கோளாகக் கொண்டிருக்கிருர்களோ அதை அவர்களுக்கு அம்பிகை ஆதரவுடன் நல்கி உதவுகிருள். எந்த எந்த உயிர் எந்த எந்த முறையைக் கையாண்டு ஆத்மபரிபாகம் அடைய வேண்டுமோ அந்தந்த முறைகளுக்கெல்லாம் அன்னை உதவிபுரிகின்ருள். பொருள் ஈட்டுவது சான்ரோர்களால் பாராட்டத்தக்க செயல் அன்று. ஆயினும் ஜீவகோடிகளுள் ஒரு கூட்டத்தார் பொருள் ஈட்டுதலிலேயே கண்ணும் கருத்துமாயிருக்கின்றனர். அன்னவர்கள் படைத்துள்ள ஆசை நிறைவேறப் பெற வேண்டும். பொருள் ஈட்டுதல் பொருளற்ற ஆசையென்னும் விவேகம் ஒருகாலத்தில் அவர்களுக்கு வரும் வரையில் அம்பிகை அன்னவர்களின் ஆசைகளை நிறைவேற்றிக் கொண்டே இருக்கிருள். ஆதலால் அவள் குஹ்யகாராத்யா என்னும் பெயர் பெற்றுள்ளாள்.

**721. कोमलाङ्गी கோமளாங்கீ**—மெல்லிய அவயவங்களை உடையவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

சரீரத்தில் அமைந்துள்ள அங்கங்கள் மிருதுவானவைகளாகவும், பிரீதிகரமானவைகளாகவும்,மங்களமானவைகளாகவும்அமைந்திருப்பது

மேன்மைக்கு அறிகுறிகளாகும். அன்னை பரா சக்தியின் அங்கங்களாகவும் அம்சங்களாகவும் பிரபஞ்சத்திலுள்ள யாவும் வடிவெடுத்து இருக்கின்றன. அவைகளுள் கோமளமாக இருப்பவை வசீகரத்தை உண்டு பண்ணுகின்றன. பிரபஞ்சத்தில் இடம் பெற்று இருப்பவைகளுள் கவர்ச்சிகரமானவைகள் பல இருக்கின்றன. அத்தகைய அமைப்பு ஆத்ம சாதகனுக்கு மேலாம் போதத்தை ஊட்டுகிறது. கடவுள் சிந்தனையை வளர்ப்பதற்கு ஏதுவானவைகளாக இருப்பவைகள் யாவும் பிரீதிகரமான பகுதிகளாம். அவைகளுள் மனது லயமாவது ஒருவகை அம்பிகை வழிபாடாகிறது. ஆதலால் அவளுக்குக் கோமளாங்கி என்னும் நாமம் வந்துள்ளது.

**722. गुरुप्रिया குருப்ரியா** — குருவுக்குப் பிரியமானவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

குரு என்னும் பதம் மூத்தவன் எனப்பொருள் படுகிறது. அமைப்பில் மூத்தவன், ஆயுளில் மூத்தவன், அறிவில் மூத்தவன், ஆற்றலில் மூத்தவன், அன்பில் மூத்தவன், தியாகத்தில் மூத்தவன் மற்றவர்களால் ஆராதிக்கப்படுகிறான். அத்தகைய ஸ்தானத்தில் இருப்பவர் பரமசிவனார். அம்பிகை பரமசிவனாருக்குப் பிரியமானவள். அம்பிகை தானே பரமசிவனாரிடத்துப் பிரியம் வைத்திருப்பவள். பெரியதைப் பெரியதே பாராட்டவல்லது. பெரியவர்களில் எல்லாம் பெரியவராயிருப்பவர் மகாதேவன். அவருக்கு நிகரான மூர்த்தியில்லை. சக்தியின் சொருபங்களுள் மகாதேவிக்கு நிகரான மூர்த்தி இல்லை. போற்றுதலுக்குரிய பெரிய நிலையிலிருப்பது சிவசக்தி. இதை முன்னிட்டே அம்பிகைக்குக் குருப்ரியா என்னும் பெயர் வந்துள்ளது.

**723. स्वतन्त्रा ஸ்வதந்த்ரா**—முற்றிலும் தன்னையே சார்ந்திருப்பவள் என்பது இதன் பொருள்.

வாழ்க்கையிலும் செய்கின்ற ஒவ்வொரு செயலிலும் பிறருடைய ஏவலை நாடியிருப்பவள் பரதந்த்ரா எனப்படுகிறாள். புறவுலகினின்று எத்தகைய ஏவலோ துணையோ அம்பிகைக்குத் தேவையில்லை. பிரபஞ்சத்தை ஒழுங்காக நடாத்துதல் என்னும் செயலை அவள் தானே நிர்வகித்து வருகிறாள். அப்படிச் செய்வதில் குறைபாடு ஏதும் உண்டாவதில்லை. அம்பிகையினுடைய இத்தகைய அரிய பாங்கினின்று ஆத்ம சாதகர்கள் கற்றுக்கொள்ளவேண்டிய பாடம் ஒன்று உண்டு. ஏவா மக்கள் மூவா மருந்து என்பது கோட்பாடு. செய்கிற ஒவ்வொரு சிறு செயலுக்கும் பிறருடைய ஆணையையோ போதனையையோ முன்மாதிரியையோ எதிர் பார்த்து இருப்பவர்கள் வாழ்க்கைக்கு உதவமாட்டார்கள். என்ன சூழ்நிலையில் எத்தகைய செயலைச் செய்யவேண்டுமென்று யூகித்துப் பார்க்கவேண்டும். பிறகு செயலில் ஈடுபட வேண்டும். அங்ஙனம் யூகத்திலும் முயற்சியிலும் ஈடுபடுபவர்களுக்கு ஸ்வதந்த்ரம் தானாக வந்தமைகிறது.

அம்பிகை ஸ்வதந்த்ரத்தை உடைத்திருப்பதன் விளைவாக நிகமம் என்னும் சாஸ்திரம் அமைவதாயிற்று. வழிபாட்டு முறையை எங்ஙனம் கொண்டு செலுத்தவேண்டுமென்று பரமேஸ்வரன் பரமேஸ்வரிக்குப் புகட்டிய பகுதி ஆகமம் என்னும் பெயர் பெறுகிறது. வழிபாட்டை எங்ஙனம்கொண்டு செலுத்தவேண்டுமென்று அம்பிகை ஈசனாருக்கு எடுத்துப் புகட்டிய பகுதி நிகமம் என்னும் பெயர் பெறுகிறது. இந்த நிகமமானது ஆகமத்துக்கு நிகராக இருப்பதால் அம்பிகைக்கு ஸ்வதந்த்ரா என்னும் நாமம் வாய்த்திருப்பது பொருத்தமானதாகிறது.

அம்பிகையின் வழிபாட்டுக்குரிய முறைகளுள் தந்த்ர சாதனம் என்பது அலாதியான பாங்குடையதாகிறது. அது வைதிக மார்க்கத்தோடு இணைந்திருப்பதன்று. வைதிக மார்க்கத்தினின்று அது அறவே முரண்படுகிறது. வைதிக மார்க்கம் தக்ஷிண ஆசாரம் என்றும் தந்த்ர சாதனங்கள் வாமாசாரம் என்றும் பெயர்கள் பெற்றிருக்கின்றன. வாமாசாரத்தைத் தன்னுடைய பக்தர்களுள் ஒரு சிலருக்கு அம்பிகை தானே புகட்டியருளியுள்ளதால் அவள் ஸ்வதந்திரா என்னும் பெயர் பெற்றவளாகின்றாள்.

**724. सर्वतन्त्रेशी ஸர்வதந்த்ரேசீ** — தந்த்ரங்கள் யாவுக்கும் தலைவியாக இருப்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

தந்த்ர சாதனங்கள் அறுபத்துநான்கு இருக்கின்றன. அவையாவும் பசுபாவம், வீரபாவம், திவ்யபாவம் ஆகிய மூன்று பகுதிகளாகப் பிரிக்

கப்பட்டிருக்கின்றன. இம்மூன்றனுள் ஆரம்ப தசையிலிருக்கும் பசுபாவம் முற்றிலும் தக்ஷிண சாரத்தோடு ஒத்திருக்கிறது. பசுபாவத்தில் வாமாசாரத்துக்கும், தக்ஷிணசாரத்துக்கும் இடையில் எந்த விதமான வேற்றுமையும் இல்லை. பிறகு வீரபாவத்திலும் திவ்ய பாவத்திலும் தந்த்ர சாதனங்கள் அலாதியான போக்கில் போகின்றன. வீரபாவத்தை அனுஷ்டிப்பதற்கு ஏற்ற அரங்கமாக அமைந்திருப்பது ஸ்மசானம். அதற்கேற்ற நேரம் அமாவாசை நள்ளிரவு. சூழ்நிலையோ சாதகனைத்தவிர வேறு எந்த மானுடனும் அங்கு இருக்கலாகாது. சாதனத்துக்குரிய பொருள்களோ அகால மரண மடைந்த சவம், வெட்டி எடுக்கப்பட்ட வெவ்வேறு ஜந்துக்களின் தலைகள். நைவேத்தியத்திற்குரியவைகளோ பஞ்சமகரம் — இங்ஙனம் அமைப்பே விபரீதமாயிருக்கிறது. அந்தந்தச் சாதனத்திற்கேற்ற மந்த்ரமும் அலாதியானது. இவைகளை முறையாகக் கையாண்டால் ஆத்ம சாதகன் பயத்தை வெல்லுகிறான். ஆதலால் இது வீரபாவம் என்னும் பெயர் பெற்றுள்ளது. திவ்விய பாவத்திலோ வழிபாட்டுக்குக் கட்டழகே வடிவெடுத்துள்ள மங்கையொருத்தி இடம் பெறுகிறாள். இந்தச் சாதனத்தைக் கொண்டு செலுத்துகிறபொழுது சாதகனுக்குக் காமவெறி இம்மியளவாவது தலையெடுக்குமானால் அவனுக்கு உடனே பைத்தியம் பிடித்துவிடும். ஆனால் இந்தச் சாதனங்களை வெற்றிகரமாகப் பூர்த்திபண்ணுபவனுக்கு அம்பிகையினுடைய அருள் அக்கணமே வாய்க்கிறது. இத்தகைய கடினமான சாதனங்கள் யாவுக்கும் அம்பிகை தலைவியாயிருப்பதால் அவள் ஸர்வ தந்த்ரேசீ என்னும் நாமம் படைத்துள்ளாள்.

**725. दक्षिणामूर्त्तिरूपिणी தக்ஷிண மூர்த்தி ரூபிணீ** — தக்ஷிணமூர்த்தியின் வடிவத்திலிருப்பவள் என்பது இந்நாமத்தின் பொருள்.

சிவனார் கல்லால விருட்சத்தின்கீழ் தென்முகமாக அமர்ந்திருக்கிறார். இடக்காலைத் தூக்கி வலக்காலின்மீது நாட்டியிருக்கிறார். வலக்கையில் சின்முத்திரை தாங்கியிருக்கிறார். அவர் உபதேசித்தது மௌனம். அதன் உட்பொருள் பரவஸ்துவாகிய தாம் பிரபஞ்சத்திற்கு அப்பால் பட்டவர் என்பதாம். சொல்லைக்கொண்டு அவரைச் சித்திரிக்க முடியாது. உபதேசங்களனைத்தின் முடிந்தநிலை இது. இதைப் புகட்டுகின்ற சிவனார் பாடம் புகட்டுகிற மூர்த்திகளனைவருக்கும் முன்மாதிரியாக இலங்குகிறார். மனிதனொருவன் எதை எடுத்துப் பிறர்க்குப் புகட்டுகிறானோ அதன் வடிவத்தில் அவன் தானே இலங்கவேண்டும். **Practice better than precept.** மக்களில் பெரும்பான்மையோர் புகட்டுவது ஒன்று தாங்கள் பழகுவதுவேறொன்று. ஆதலால் புகட்டுவது யாவும் பயனற்றதாய்ப் போகிறது. மனிதன் சீலத்தில் சிறந்தவனாயிருப்பானாகில் தன் பாங்கைப்பற்றி அவன் ஒன்றும் பேச வேண்டியதில்லை. அவனுடைய ஒழுக்கமே அவன் பாங்குக்கு விளக்கமாகிறது. போதனை வாழ்க்கைக்கு இன்றியமையாத கோட்பாடாகிறது. ஆனால் போதனையில் பெரும் பகுதி அனர்த்தமாய்ப் போவதற்குக் காரணம் அது வாழ்க்கையோடு சம்பந்தப்படாதிருப்பதேயாம். சிவனார் படைத்துள்ள சொரூபமும் அவர் போதிப்பதும் இணைபிரியாதவைகள் ஆகின்றன. அவர் மௌனத்திலிருந்து மௌனத்தின் சிறப்பைப் போதிக்கிறார். இதை ஆங்கிலத்தில் **Silent elocution** என்பார்கள். மனம் உள்முகமாகச் சென்று பரத்தில் ஒடுங்குமளவு பேச்சுக் குறைகிறது. அந்நிலையில் அருள்சக்தி ஓங்குகிறது. பேசாமலேயே அந்நிலையிலிருப்பவர்கள் அருளை மற்றவர்களுக்கு வழங்குகிறார்கள். பேச்சற்று இருப்பதில் பொருள் ஏராளமாய்ப் புதைந்திருக்கிறது. சிவசொரூபம் நாதத்துக்குஅப்பாற்பட்டது. சொல் ஆங்கு எட்டுவதில்லை. அந்நிலையில் சிவனார் இருந்தபடி ஜீவகோடிகளை அந்நிலைக்குக் கவர்ந்திழுக்கிறார். பண்பட்டுள்ள ஒரு சிலரே அந்தப் போதனையைக் கிரகித்து அந்த மயமாகின்றனர். சனகன், சனந்தனன், சனந்தன், சனத்குமாரன் ஆகிய நால்வரும் இதற்குச் சான்று ஆகின்றனர். பல பிறவிகளில் பெற்ற அனுபவத்தின் விளைவாக அவர்கள் விருத்தர்களாக இலங்குகின்றனர். குருமூர்த்தியாகிய சிவனாரோ யாண்டும் காலாதீதத்தில் இருப்பதால் ஆயுள் அவரைப் பாதிப்பதில்லை. யாண்டும் யௌவனநிலை. இப்பெரும் போதனையைச் சிவனாரின் செம்பாதியாகிய அம்பிகையும் தான் தோற்றுவித்துள்ள பெருமக்களுக்குப் புகட்டி வருகிறாள். ஆதலால் அவளுக்குத் தக்ஷிண மூர்த்திரூபிணீ என்றும் பெயர் வந்துள்ளது.

# ஸத் ஸம்பாஷணை

**கேள்வி (186) சந்நியாசம் மேற்கொண்டவர் ஏன் காவி உடை அணிகின்றனர்? இதில் ஏதேனும் சிறப்புள்ளதா?**

மனிதன் அணிகிற ஆடைக்கும் அவன் படைத்திருக்கிற மனப்பான்மைக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. படாடோபத்துடன் பகட்டான உடைகளை அணிபவனுக்குத் தற்பெருமை தானாக வருகிறது. கந்தைத் துணி அணிந்திருப்பவனுக்குக் கீழ்மைதானாக வந்தமைகிறது. மானுடனொருவன் நேர்த்தியாகத் தூய உடையணிந்துகொண்டு சங்கம் ஒன்றுக்குச் செல்லுகிறான். வழியில் வேகமாக ஓடுகிற மோட்டார் வண்டி ஒன்று சேற்றுநீரை அவன்மீது எடுத்து இறைத்துவிட்டு ஓடுகிறது. அந்நீர் ஆடையின் மீது படிந்து அதை மலினப்படுத்துகிறது. அந்நிலையில் அவன் சங்கத்துக்குச் செல்லத் தயங்குகிறான். அணிந்திருக்கிற உடைக்கும் மனிதன் கொள்ளுகிற மனப்பான்மைக்கும் நெருங்கிய தொடர்வு இருக்கிறது என்பதற்கு இவைகள் சான்றுகளாகின்றன.

காவியுடை தியாகத்தின் சின்னம். சந்நியாசி ஒருவன் காவியுடையை அணிந்திருப்பதால் தன்னுடைய மேலான இலட்சியத்தை அவன் தனக்குத்தானே ஞாபகப்படுத்திக் கொள்ளுகிறான். காவியுடை அணிந்திருக்கிற மனிதன் ஒருவன் தெருவிலே தாறுமாறாக நடந்துகொண்டால் மக்கள் அவனை ஏசுவார்கள். சாதாரண உடை அணிந்திருக்கிற மனிதன் தாறுமாறாக நடந்துகொண்டால் பொதுமக்கள் அதைப் பொருள்படுத்தமாட்டார்கள். சந்நியாசியின் பொறுப்பு மிகப் பெரியது, பொதுமக்களுக்கு அவன் நல்வாழ்வின் முன்மாதிரியாகிறான். காவியுடை அவனுக்கும் பொதுமக்களுக்கும் அப்பொறுப்பை எடுத்து ஞாபகமூட்டுகிறது.

மேடையில் நாடகத்திலே மானுடனொருவன் துறவியாக மிக நன்றாக நடித்தான். அதைப் பாராட்டி அவனுக்குச் சன்மானம் வழங்கப்பட்டது. அதைத் துச்சமாக அவன் ஒதுக்கித் தள்ளினான். நாடகம் முற்றுப்பெற்றான பிறகு சாதாரண உடையணிந்துகொண்டு மேடையிலின்று கீழே வந்து சன்மானத்தைக் கேட்டான். பலர் அறிய மேடைமீது வைத்து வழங்கிய சன்மானத்தை அந்நிலையில் ஏன் ஏற்க மறுத்தாய் என்று சன்மானம் வழங்கியவர் கேட்டார். அதற்கு அவன் 'நான் அப்பொழுது காவியுடை அணிந்திருந்தேன். துறவி ஒருவனுக்குச் சன்மானம் ஏற்பது பொருந்தாது' என்றான். இதினின்று காவியுடை அணிந்திருப்பதன் மேலாம் பொறுப்பு நன்கு புலனாகிறது.

காவியுடை அக்னியின் சின்னமாகிறது. நிறத்தில் அக்னியும் காவியுடையும் ஒரே பாங்குடையவைகளாக விளங்குகின்றன. அகத்திலுள்ள ஆசாபாசங்களையெல்லாம் ஞானாக்கினியில் போட்டுத் தகித்துவிட்டதாகத் துறவி ஒருவன் உணரவேண்டும். அந்த உணர்ச்சிக்குப் பொருத்தமாக அக்னியின் நிறம்படைத்திருக்கின்ற காவியுடை அமைந்திருக்கிறது.

இனி ஒவ்வொரு நிறத்துக்கும் ஒருவிதக் கூறு உண்டு. அக்னியின் நிறம் காவியுடையின் வாயிலாகச் சர்வகாலமும் மனதில் கருதப்படுவதால் மனதுக்குப் பண்பாடு தற்செயலாய் வந்தமைகிறது. இக்காரணத்தை முன்னிட்டும் சந்நியாசி ஒருவன் காவியுடை அணிவது ஐதிகமாக வந்துள்ளது.

**கேள்வி: (187) மக்கள் எல்லாரும் ஆதி பாபத்துக்கு (Original Sin) உட்பட்டிருக்கிறார்கள் என்றும் அத்தகைய பாபத்தை அகற்றுதற்கு ஏசுநாதருடைய அனுக்ரஹம் ஒன்றே உற்ற உபாயம் என்றும் கிறிஸ்தவ மதவாதிகள் சாதிக்கின்றனர். இக்கோட்பாட்டை வேதாந்தம் எப்பாங்கில் கருதுகிறது.**

கிறிஸ்தவமத சம்ப்ரதாயப்படி மக்கள் இனத்தைக் கடவுள் முதன் முதலாகத் தம்பதிகள் இருவர் வாயிலாகச் சிருஷ்டித்தார். அத் தம்பதிகளின் பெயர் ஆதாம், ஏவாள் **(Adem Eve)** ஆவார்கள். ஆண்டவனுடைய ஆணையை மீறி ஒரு மரத்திலிருந்த கனியை அவர்கள் இருவரும் புசித்தார்களாம். அது மன்னிக்க முடியாத பாபமாயிற்று. அந்த ஆதி தம்பதிகளுடைய சந்ததிகளாக உலக மக்கள் எல்லாரும் வந்திருப்பதால் அந்தப் பாபம் மக்கள் எல்லாரையும்

வளைத்துப் பிடித்திருக்கிறதென்றும், அந்தப் பாபத்திற்கு விமோசனம் தருவதற்கு ஏசுநாதர் ஒருவர்க்கே ஆண்டவன் அருகதை கொடுத்திருக்கிறார் என்றும் கிறிஸ்தவ மதவாதிகள் மக்களுக்குப் போதித்து வருகின்றனர். வேதாந்த தர்சனம் இக்கொள்கையை ஏற்றுக்கொள்ளுகிறது இல்லை. ஒவ்வொரு மனிதனும் அவனவனுடைய பாப புண்ணியத்துக்கு அவனவனே பொறுப்பாளியாகிறான். தந்தை செய்த குற்றத்துக்கு உலக அரசாங்கங்கள் மைந்தனைத் தண்டிப்பதில்லை. ஒருவன் குற்றத்திற்கு இன்னொருவனைத் தண்டிப்பது பொருளற்ற காட்டுமிராண்டித்தனமான ஆட்சிமுறை என்று உலக நடை அதை ஒதுக்கித்தள்ளுகிறது. அது பொருத்தமான நியாயம். அதற்கு மாறாகப் பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டுகளுக்கு முன்பு யாரோ ஒரு ஆதி தம்பதிகள் செய்த அல்பமான குற்றத்திற்குத் தண்டனையாக வழி முறை வழிமுறையாக வருகிற மானுட வர்க்கம் முழுவதும் அழிந்துபட்டுப் போகாத நரகத்தீயில் காலமெல்லாம் வருந்திக்கொண்டிருக்க வேண்டும் என்னும் கடவுளுடைய நியதி எத்தகைய புல்லியது என்பது சொல்லாமலே விளங்குகிறது. சமயத்தின் பெயரால் பொய்யான கோட்பாடு ஒன்றை மக்களுக்கு எடுத்துப் புகட்டுவது பொருந்தாது.

காலக்கிரமத்தில் பிறவியிலிருந்தே தூய்மையும், நல்லொழுக்கமும் வடிவெடுத்துள்ள சான்றோர்கள் உலகத்தில் வந்திருக்கிறார்கள். அன்னவர்களில் பலருக்கு ஏசுநாதரைப்பற்றி ஒன்றுமே தெரியாது. அதை முன்னிட்டு அன்னவர்களுக்குத் தண்டனை விதிப்பதும் யுக்திக்கு ஒவ்வாது. அது கொடுங்கோலாட்சிக்கு நிகராகும்.

மனிதன் தெய்விகத்தினின்று வந்தவனென்றும், மூலநிலையில் மனிதனுக்கும் பாபத்திற்கும் ஒரு சம்பந்தமும் இல்லையென்பதும் வேதாந்தத்தின் கோட்பாடு. அறியாமையின் விளைவாக ஒவ்வொரு மனிதனும் ஒவ்வொரு போக்கில் தீய வழியில் செல்லுகிறான். அதன் விளைவாக அவன் துன்பத்துக்கு ஆளாகிறான். ஒவ்வொரு மனிதனும் வாழ்க்கையில் அப்போதைக்கப்போது அனுபவிக்கும் துன்பத்திற்கு அவனே பொறுப்பாளி என்பது வேதாந்தத்தின் கோட்பாடு. துன்பத்தில் அழுந்தித் தன்னுடைய தீச்செயலைத் தானே திருத்தியமைக்கிறான். தன்னைத்தானே திருத்திக் கொள்வதற்கே இன்ப துன்பங்கள் இயற்கையின்கண் அமைந்துள்ளன. இதற்குப் புறம்பாகக் கடவுள் அமைத்துள்ள நரகவேதனை என்பது எங்குமேயில்லை. நரகவேதனையைப் பற்றிப் போதனை பண்ணுகிற மதவாதியின் உள்ளத்தில்தான் அத்தகைய நரக வேதனை அமைந்திருக்கிறது.

மனிதனுக்குச் சொந்தமாயுள்ள தெய்விகத்தை அவனுக்கு எடுத்துப் புகட்டுவதே மனிதனுக்கு மனிதன் செய்கின்ற பேருபகாரம் ஆகும். பிறகு மனிதன் தெய்விகத்திற்குச் சொந்தம் என்பதே சத்தியம். மாசு படிந்துள்ள நீர் மீண்டும் ஆவியாக மாறித் தூய நிலையடைவதற்கு நிகராக அறியாமையினால் தீச்செயலையும், துக்கத்தையும் வரவழைத்துக் கொண்ட மனிதன் விவேகத்தால் நல்வினை ஈட்டிப் பழைய தூய நிலையை எய்தலாம் என்பதே வேதாந்தக் கோட்பாடு. இதற்குப் புறத்தில் இரட்சகர்கள் யாரும் தேவையில்லை.

**கேள்வி : (188) மனதை ஒருமுகப்படுத்துதல் எப்படி ?**

சின்னஞ்சிறு வயதில் மனது ஒருமுகப்பட்டிருக்கிறது. அதற்குக் காரணம் ஆசை ஒன்றும் குழந்தையின் உள்ளத்தில் இன்னும் உருவெடுக்கவில்லை. குழந்தை வளர வளர அதனிடத்து மற்றவர்களால் ஆசை ஊட்டப்படுகிறது. மற்றவர்களைப் பார்த்துக் குழந்தை தானும் ஆசையை அதிகப்படுத்திக் கொள்கிறது. எவ்வளவுக்கெவ்வளவு ஆசையின் வேகம் அதிகமோ, அவ்வளவுக்கவ்வளவு பலப்பல பாங்குகளில் மனது சிதறடைந்து போகிறது. ஆசையில்லாத மனது கட்டி வைத்துள்ள கடுகு மூட்டைக்கு நிகர். ஆசைக்கு அடிமைப்பட்ட மனது அவிழ்த்துக் கொட்டிய கடுகுக்கு நிகர். ஆசையை ஒடுக்குகின்ற அளவுக்கும், ஆசையை உருவெடுக்காது தடுக்கின்ற அளவுக்கு மனதை ஒருமுகப் படுத்தலாம். தியானத்தில் ஆழ்ந்து செல்லுதற்கேற்ப ஆசை ஒதுக்கப்படுகிறது. தியானத்தில் சாந்தமும், ஆனந்தமும் ஓங்குகின்றன. ஒருமுகப்பட்ட மனதின் விளைவு அதுவாம். மன ஒருமுகப்பாட்டுக்கு இடைவிடாத அப்பியாசமும் தேவை.

# வாசுதேவமனன விளக்கம்

( சுவாமி ஸதானந்தர் )

**கேள்வி :** நாம் ஆத்மாவைப்பற்றி விசாரித்து ஆராய்ந்து கொண்டிருக்கும் போது மனதின் எண்ணங்களை ஏன் விசாரிக்க வேண்டும்?

**பதில் :** எல்லா ஜீவர்களுக்கும் பந்தம் மோக்ஷம் என்பன மனதின் மூலமாகத்தான் ஏற்படுகின்றன. ஸ்வபாவமாகவே நிர்மலமாக உள்ள மனதுக்கு அசுத்தமான எண்ணத்துடன் ஏற்படுகிற சேர்க்கையே பந்தமாகும். இந்த அசுத்தம் நீங்கி பழைய யதார்த்த சுத்தநிலை ஏற்படும் போது அது மோக்ஷம் எனப் படுகிறது. ராகதுவேஷாதி பதினறு வகைகளில் முதல் பதினன்கு வகைகள் அசுத்தமானவை. பக்தி சிரத்தை என்ற இரண்டும் சுத்தமான எண்ணங்கள். முதல் பதினன்குவகை விருத்திகள் எல்லாருக்கும் பிரயத்தனமின்றியே மீண்டும் மீண்டும் வந்துகொண்டிருக்கும். இவை மனிதர்களைப் பாபம் செய்வதிலேயே தூண்டும். இவைகள் மானுடரைக் கீழ்மைப்படுத்துமேயன்றி மேலே போக விடாது. கீழான ராகதுவேஷங்களை நீக்கிப் பக்தி சிரத்தை ஆகிய இவைகளுடன் கர்மங்களைச் செய்வதினல் காலக்கிரமத்தில் சம்சாரத்திலிருந்து விடுதலை பெறும் நிலைமை ஏற்படும். ஆகையால் மனிதன் தன்னுடைய மனதைத் தூய்மைப்படுத்த வேண்டும். பக்தியும் சிரத்தையும் மனதைத் தூய்மைப்படுத்தவல்லவைகள். ஆகையால் பக்தி, சிரத்தை உடையவனய் இரு. பசி தாகங்களைப் போக்குவதும் மல மூத்திர விசர்ஜனமும் யதேச்சையாக நிகழ்கின்றன. இவைகளை நிறுத்த முடியாது. நிறுத்தினல் உடல் நலிவடையும், நோய்வாய்ப் படும். இதை நித்திய கர்மம் என்றும் சொல்வார்கள். இந்த நித்திய கர்மங்களைச் செய்வதனல் சுவர்க்கமோ, நரகமோ இரண்டும் வாய்க்கா. ஆயினும் சரீர சம்ரக்ஷணைக்கு அவைகள் நிகழ்ந்தாக வேண்டும். அதன் மூலம் நன்ருக இருக்கிற ஆரோக்கியமான சரீரத்தை நல்ல காரியத்துக்கு, ஆத்மசாதனத்துக்கு நன்குபயன் படுத்த வேண்டும்.

விழிப்பு, சொப்பனம் இரண்டு நிலையிலும் ராக, துவேஷங்கள் இருக்கின்றன, மனதும் இருக்கிறது. ஆகையால் அங்குக் கர்மமும் நிகழ்கிறது. ஆழ்ந்த உறக்கம், மூர்ச்சை, சும்மா இருத்தல், சமாதி ஆகிய நிலைகளில் ராக துவேஷங்கள் இல்லை. மனது ஓய்வுற்றிருக்கிறது. ஆகையால் அவ்வேளைகளில் கர்மமும் இல்லை. இவைகளை யெல்லாம் நாம் அனுபவத்தில் உணர்கிறேம். ஆகையால் கர்மத்துக்கு ராக துவேஷமே காரணம், அவையே தூண்டுதல் செய்கின்றன என்பது தீர்மானம்.

**கேள்வி :** இந்த ராக துவேஷங்கள் எப்படி உண்டாகின்றன ?

**பதில் :** அபிமானத்தால், பற்றுதலால் உண்டாகின்றன. தேசாபிமானம், சரீர அபிமானம் என்று சொல்லுகிறேம். மனிதன் தன் சரீரத்தின் பேரிலும், தன் இதர உடைமைகள் பேரிலும், வைத்துள்ள பெரும் பற்றுதல் அகங்காரம், மமகாரம் என்றும் சொல்லப்படுகிறது. நான் ஆண், இன்ன வயது, இன்ன அந்தஸ்தில் இருக்கிறேன், படித்தவன், பணக்காரன், அழகானவன், வீரன், தீரன் என்றெல்லாம் நம்மைப்பற்றி நினைத்துக் கொண்டிருக்கிறேமே அந்தப் பாவங்களுக்கு, உணர்வுகளுக்கு அகங்காரம் என்று பெயர். அகம் என்ருல் நான். அகங்காரம் என்ருல் என்னைப் பற்றிய அபிப்பிராயங்கள், உணர்வுகள் என்று பொருள். நாம் இந்தச் சரீரம் அல்ல. ஆத்மா தான் நமது நிஜசொரூபம் என்கிற விழிப்பு வரும் போது அகங்காரம் அழிந்து போகிறது. ஆகையால் உண்மையில் இல்லாத ஒன்றை நாம் கற்பித்துக் கொள்கிற தவருன உணர்வு, பாவம், அகங்காரம் என்று விளக்கப்படுகிறது. ஒரு பெண்ணுக்குத் தான் ஒரு ஸ்திரீ என்கிற அபிமானம் எது வரையில் இருக்குமோ அதுவரையில் அனுராகத்துடன் தன் கணவனுக்குப் பணிவிடை செய்வது, வீட்டைப் பாதுகாப்பது, குழந்தைகளைச் சிரத்தையுடன் பராமரிப்பது, சமைப்பது போன்ற காரியங்களில் ஈடுபாடு, பிரவிருத்தி உண்டாகிறது. அதே போல கணவனுக்கும் தான் கணவன் என்கிற அபிமானம் இருக்கிற வரையில் ஆசையுடன் மனைவி, மக்களை ரக்ஷிக்கிருன், நேசிக்கிருன்,

வியாபாரம், விவசாயம் போன்ற ஜீவனேபாயங்களைக் கைக்கொள்கிருன். இப்படி எல்லா மனிதர்களும் வர்ணம், ஆச்ரமம் முதலான பற்றுதலால் தம் தம் காரியங்களை விருப்பத்துடன் செய்ய முயல்கிருர்கள். ராகதுவேஷங்களுக்கு அபிமானம், பற்றுதலே காரணம்.

இப்படிப் பரிசீலனை செய்வதனல் என்ன பிரயோஜனம் என்று கேட்கலாம். மோக்ஷத்தை அடைய விரும்பும் மனிதன் ஜாதி, வர்ணம், ஆச்ரமம், வயது, அவஸ்தை ஆகிய யாவற்றிலும் கொண்டுள்ள பற்றுதலை விட்டுவிடவேண்டும். மோக்ஷம் என்ருல் விடுதலை என்று பொருள். எதிலிருந்து விடுதலை ? அக்ஞானத்திலிருந்து விடுதலை, ஆசா பாசங்களிலிருந்து விடுதலை, அகங்கார மமகாரங்களிலிருந்து விடுதலை, சரீரபோதத்திலிருந்து விடுதலை, ஜீவ போதத்திலிருந்து விடுதலை, பந்தபாசங்களிலிருந்து விடுதலை. தென்னை மரம் ஒன்றை ஆயிரக்கணக்கான சல்லிவேர்களும், பிரதானமான ஒரு ஆணி வேரும் சேர்ந்து பற்றிப் பிடித்துக்கொண்டு அதை நேரே மரமாக நிமிர்த்தி வைத்திருக்கின்றன. ஆயிரம் கட்டு ஒருயானை பலம் என்பார்கள். மனிதனைப் பற்றிப்பிடித்திருக்கின்ற பந்தங்களுக்கு அளவே இல்லை. எல்லாப் பந்தங்களிலிருந்தும் விடுதலை பெற்ருகவேண்டும். பற்றுதல் இருக்கும் வரை ராக துவேஷங்கள் இருக்கும். பற்று நீங்கிவிட்டால் ராகதுவேஷங்கள் அழிந்து போகின்றன. அவிந்த விதை முளைக்காது. வேர் அறுந்தமரம் காய்ந்து போய்விடும். அதே போன்று பற்று அற்றுவிட்டால் ராக துவேஷம் என்கிற விஷ விருக்ஷம் பட்டுப் போகும். அம்மரத்தில் விளைகிற பாபம், புண்ணியம் என்கிற பழங்களும் இல்லாது போகும். கர்மபலன் இல்லாதபோது புதிய பிறவியும் இல்லாது போகிறது.

**பற்றுக பற்றற்ருன் பற்றினை அப்பற்றைப்**
**பற்றுக பற்று விடற்கு**

என்பது திருக்குறள். பதினறுவகை ராக துவேஷங்களில் பதினன்கு விடவேண்டியவை. அவைகளை விடுவதற்குக் கடைசி இரண்டான பக்தி, சிரத்தை ஆகியவற்றைப் பற்றிக் கொள்ள வேண்டும். கடைசியில் 'ஆசை அறுமின், ஆசை அறுமின், ஈசனேடாயினும் ஆசை அறுமின்' என்கிற நிலை வந்துவிடுகிறது. ஜீவாத்மா, பரமாத்மா என்கிற பேதம் அற்றுப் போவதால், இரண்டும் ஒன்ருகிவிடுவதால் எது எதைப்பற்றுவது? எதனிடத்து ஆசை கொள்வது? எதை அறிந்தால் அனைத்தையும் அறிந்ததாகுமோ, எதைப் பெற்ருல் அனைத்தையும் பெற்றதாகுமோ, எதைப் பெற்றபின் மீண்டும் பெறுவதற்கு ஒன்றுமில்லையோ, எதைப் பெற்ற பின் பிறப்பு இறப்பு அற்றுப் போகிறதோ அதுவே ஆத்மா. அதைப் பெற முயலுவாயாக. அதைப் பெறுவதற்குப் பக்தியும் சிரத்தையும் உடையவனய் இருப்பதே வழியாகும். பக்தி என்ருல் பெரிய பொருளிடத்து, இறைவனிடத்து வைக்கப்படுகிற பேரன்பு. சிரத்தை என்ருல் அதை அடையும் பரியந்தம் செய்கிற குன்ருத, இடையருத, தீவிர முயற்சி என்று பொருள். உலக ஆசையே எல்லாப் பந்தங்களுக்கும் காரணம். அதைக் கடவுள் ஆசையாக, கடவுள் பற்ருக, தெய்வபக்தியாக மாற்று. அதை அடைய சிரத்தையுடன் முயலுதல் மானுட ஜன்மத்தின் தலையாய கடமையாகும்.

ஒரு கட்டத்தில் வளர்ச்சிக்குத் துணைபுரியும் ஆசை மற்ருெரு கட்டத்தில் வளர்ச்சிக்குத் தடையாக வந்தமைகிறது. மானுட ஜன்மம் எடுக்கும் வரையில் உலக ஆசையை வளர்த்து வளர்ச்சியடைந்து வந்தோம். இனி தெய்வீக நிலையை அடைவதற்கு உலக ஆசை தடையாக அமைகிறது. உலகப்பற்று தெய்வப் பற்ருக மாறவேண்டும். தெய்வப்பற்று அதிகரிக்கும் அளவுதான் இனிமேல் நமக்குவளர்ச்சி யுண்டாகும். பொருள் சம்பாதிக்க வேண்டும்; புகழ் சம்பாதிக்க வேண்டும்; கீர்த்தி சம்பாதிக்க வேண்டும்; பகட்டாக வாழவேண்டும்; உடல் போகத்தை அனுபவிக்க வேண்டும் என்ற ஆசைகள் நீங்கவேண்டும். உள்ளத்தில் பக்தியையும், ஞானத்தையும், வைராக்கியத்தையும் வளர்க்க வேண்டுமென்ற ஆசை உண்டாக வேண்டும். அத்தகைய ஆசையைத்தான் அருள்தாகம் என்கின்ருேம். உலகப்பற்றை ஒழிப்பதற்கு அருள்தாகத்தை வளர்க்கவேண்டும். அருள்தாகத்தை வளர்ப்பது மானுட ஜன்மத்தின் லட்சியமாகும். மானுடன் அருள் தாகத்தை வளர்த்து மானுடப் பிறப்புக்கு அப்பாலுள்ள பரமபதத்தைப் பெறுவதில் சிரத்தை உடையவனுக இருப்பானுக.

# அனுமன்-5

(சுவாமி ஆத்மானந்தர்)

கடல் தாண்டி இலங்கை சேர்தல்

இராமாயணத்தில் அனுமன் ஆற்றிய அற்புதமான காரியங்கள் பலப்பலவாகும். அவையனைத்தினுள்ளும் தலைசிறந்தமானதாகத் திகழுவது இலங்கைக்குத் தூது சென்று ஜானகியைக் கண்டதேயாகும். இக்காலத்தவராகிய நமக்கு இன்றிருக்கின்ற இலங்கைக்குச் செல்லுதல் மிகவும் எளிதான காரியமாக இருக்கின்றது. ஆனால் இராமாயணகாலத்தவர்களுக்கு அக்காலத்திய இலங்கைக்குச் செல்லுதல் மிகமிக அரிதான காரியமாகும். அது யாவராலும் இயலாத காரியமென்றே இயம்பலாம். இலங்கை வேந்தன் இராவணனே பேராற்றல் வாய்க்கப் பெற்றவன். மூவுலகையும் வெற்றிகொண்டவன்; அறத்தை மதியாதவன். அவனுடைய அனுமதியின்றி இலங்கையினுள் ஈ எறும்பு கூட நுழைய முடியாது. நுழைதற்கரிய இலங்கையினுள் நுழைந்து, காணுதற்கரிய சீதையைத் தேடிக் காண முற்படுகிறான் அனுமன். மண்ணுலகத்தவரேயன்றி விண்ணுலகத்தவரும் ஆற்றுதற்கரிய செயலை அனுமன் செய்ய முற்படுகிறான். அதைச் செவ்வனே செய்து முடித்தற்கேற்ற தகுதி அனுமனிடத்திருந்தது என்பதில் ஐயமில்லை. இதனை இராமன் நன்கறிந்திருந்தான். சுக்ரீவனும், ஜாம்பவானும் கூட அனுமனைப் பற்றி நன்கறிந்திருந்தனர். அதனால்தான் அவர்கள் அனைவருமே ஒருமை மனதுடன் அனுமனிடம் பெரு நம்பிக்கை வைக்கின்றனர்.

> இதனை இதனால் இவன் முடிக்கும் என்றாய்ந்து
> அதனை அவன்கண் விடல்.

என்ற குறளுக்கேற்ப அனுமனைத் தேர்ந்தெடுத்துத் தென்திசை நோக்கி அனுப்புகின்றனர்.

அரசியல் தூதனாக அனுப்புதற்கு மாந்தர் அனைவரும் ஏற்றவரன்று. தூதுசெல்லுதற்கேற்ற தகுதி யாரிடம் நிறைந்திருக்கிறதோ அன்னவனையே தூதனாகத் தேர்ந்தெடுத்தனுப்ப வேண்டும். தூதனுக்குரிய லக்ஷணங்கள் அனைத்தும் அமையப்பெற்றவனே சிறந்த தூதனாக இருக்க முடியும். சுருங்கக்கூறின் நிறை குணங்கள் அனைத்தும் ஒருங்கே நிரம்பப்பெற்ற நிறைமனிதனே தூதனாதற்குத் தகுந்தவனாகின்றான். தூதனிடத்து அன்பும், அறிவும், ஆற்றலும், அச்சமின்மையும், நாவன்மையும், நன்னூல் கல்வியும் நிரம்பப் பெற்றிருக்கவேண்டும்.

"அன்பறிவுஆராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்கு இன்றியமையாத மூன்று."

> "தூய்மை துணைமை துணிவுடைமை இம்மூன்றின்
> வாய்மை வழியுரைப்பான் பண்பு"

என்பன பொய்யாமொழிகள்.

இராமனுக்குக் கைங்கரியம் செய்வதென்றால் அனுமனுக்கு அளவிடற்கரிய ஆனந்தம் பொங்கும். இராம கைங்கரியத்துக்கென்றே தன்னை முழுக்க முழுக்க அர்ப்பணித்துக் கொண்டவன் அவன். உயிரையும் பொருட்படுத்தாது இராம கைங்கரியத்தைச் செய்து முடிப்பதில் பேரார்வம் கொண்டவன் அனுமன். அங்கதன் தலைமையில் தென்திசை நோக்கி வந்த வானரப்படையினர், மேற்கொண்டு செய்வதறியாது கடற்கரையில் மனஞ் சோர்ந்து நிற்கின்றனர். கடல் கடந்து இலங்கை செல்லவோ, சீதையைக் கண்டு மீளவோ தங்களால் இயலாது என்று எல்லாரும் இயம்பி விடுகின்றனர். இந்நிலையில்தான் ஜாம்பவான் உற்சாக மூட்ட அனுமன் கடல் கடக்க முன் வருகின்றான். நெடுமாலைப் போல் பெருவடிவு கொண்டு மகேந்திரமலைமீது வானுற வளர்ந்தோங்கி நிற்கிறான். தன் இரு கால்களையும் மலைமீது அழுத்தி வாலை உயர்த்திக் கழுத்தைச் சுருக்கிக் கைகளை நீட்டி உலகம் அளாவ வேகமாகப் பாய்ந்தெழுகின்றான். அவனை விண்ணவர் ஏத்தினர்; முனிவர் அவன் செயல் கண்டுவியந்து வாழ்த்தினர்; மண்ணுலகத்தவர் அவன் பெருமையினை எண்ணி வணங்கினர். வேகமாகச் செல்லும் அனுமனுக்கெதிரில் திடீரென்று மைநாகமலை கடலிலிருந்து தோன்றி நின்றது. பொன்மயமாகப் பொலிந்த அம்மலையைத் தன் மார்பால் மோதித் தள்ளிவிட்டு அப்பால் செல்ல முயல்கின்றான். ஆனால் அந்த மலையோ ஒரு மானுட வடிவு கொண்டு அனுமன் எதிரில் தோன்றி, "நான் பகைவன் அல்லன். இந்திரன் மலைகளின் சிறகுகளை

அரிந்த காலத்தில், உன் தந்தையாகிய வாயு பகவானல் நான் காப்பாற்றப்பட்டுக் கடலுக் குள் இருக்கிறேன். அந்த நன்றியை மறவாது உன்னிடத்து அன்பு செலுத்துகிறேன். சமுத் திரராஜன் உன் வருகையைத் தெரிவித்தான். அன்பின் மிகுதியினல் உனக்கு விருந்து படைக்க நான் விரும்புகிறேன். அதனை நீ ஏற்றுக் கொள்ளவேண்டும். யான் அளிக்கும் விருந்தினை அருந்தி என்பால் தங்கி இளைப் பாறிச் செல்வாயாக" என்றது மைந்நாகமலை. அது கேட்ட அனுமன் மைந்நாகமலையின் மெய் யன்பினை மனமாரப் பாராட்டினன். "நான் இராம கைங்கரியத்தின் பொருட்டுச் செல்லு கிறேன். எனக்குப் பசியோ தாகமோ எதுவுமில்லை. நான் இராமகைங்கரியத்தை வெற்றிகரமாக முடித்துக்கொண்டு திரும்புகை யில், நீ அளிக்கும் விருந்தினை ஏற்றுக்கொள்ளு கிறேன். இப்பொழுதோ விருந்திலும் சிறந்த உன் அன்பினை ஏற்றுக்கொண்டு செல்லு கிறேன்" என்ருன்.

உயர்ந்த காரியமொன்றை நிறைவேற்ற விரும்புகிறவர்கள் அதன்பொருட்டு அயராது உழைக்கவேண்டும். உயர்ந்த காரியங்கள் எதுவும் எளிதில் நிறைவேறிவிடா. எத் துணையோ இடையூறுகள் வந்து காரியத்தைத் தடைப்படுத்தும். பலப்பல ஆசைகள்தோன்றி லக்ஷியத்தினின்று வழுவும்படி செய்யும். உறுதியான உள்ளம் படைத்தவர்கள்தாம் இந்த மயக்கங்களிலிருந்தெல்லாம் விடுபட முடி யும். மனிதன் பொன்னுக்கு அடிமைப்பட்ட வன். அதே போன்று நாவுக்கும் அடிமைப் பட்டவன். அறுசுவை உணவருந்தி ஆபரணங் களால் அலங்கரித்துக் கொள்ளுவதைத்தான் மக்களில் பெரும்பாலோர் விரும்புகின்றனர். உயர்ந்த வாழ்க்கையில் ஈடுபடுகின்றவர் களுக்கு இந்த இரண்டும் இரு தடைகளாகும். இந்த இரு தடைகள்தாம் மைந்நாக மலையாக வும், அது தரும் விருந்தாகவும் அனுமனுக் கெதிரில் வருகின்றன. ஆனல் புலனைந்தும் வென்ற அனுமனே அவைகளைப் பொருட்படுத் தாது செல்லுகிருன். எடுத்துக்கொண்ட காரி யம் முடியும் வரை வேறெதையும் நினையேன் என்று கூறிச் செல்லுகிருன்.

மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்பும் கொள்ளார்
கருமமே கண்ணயி னர்

என்பது நீதிநெறி விளக்கம். இந்த நீதிநெறி விளக்கத்துக்கு அனுமன் செயல் எடுத்துக் காட்டாய் இருக்கின்றது.

மைந்நாக மலையிடத்திருந்து விடைபெற்றுச் சென்ற அனுமன், தனது வேகத்தை அதிகரித் துக்கொண்டு புயல்காற்றைப்போல் வான வெளியில் பறந்து சென்றுகொண்டிருந்தான். அப்பொழுது தேவர்கள் அனுமனைச் சோதிக்க விரும்பினர். எடுத்துக்கொண்ட காரியத்தை எந்த இடையூறுவரினும் அனுமன் இனிது செய்துமுடிப்பானு என்பதை அறியவிரும்பினர். அனுமனின் பராக்கிரமத்தை அறிய சரசையை அனுப்பிவைத்தனர். அவள் அரக்கி உருக் கொண்டு அனுமன் எதிரே ஆகாயத்தில் நின் ருள். அவள் அனுமனை நோக்கி, "நீ இங்கு வந் தது என் பெரும் பசிப்பிணியைத் தீர்ப்பதற்கா கத்தானே! என் வாயினுள் புகுந்துவிடு. இல்லை யேல் உன்னை விழுங்கிவிடுவேன்" என்ருள். அதற்கு மறுமொழியாக அனுமன், "பெண் பசி யைப் போக்குவது ஆண்மகனுகிய என் கடமை யாகும். ஆனல் இப்பொழுது நான் இராம காரியமாகச் சென்று கொண்டிருக்கிறேன். அதைச் செய்து முடித்தபின்னர் உன்னிடம் வந்துசேருகிறேன். அதன்பின்னர் என்னை விழுங்கி உன் பசியைப் போக்கிக்கொள்ள லாம்" என்ருன். ஆனல் சரசையோ அனுமன் கூற்றைப் பொருட்படுத்தவில்லை. அவள் தன் வாயைக் குகைபோல் திறந்துகொண்டு அனு மனை விழுங்க முன்வந்தாள். அனுமனே அவள் விழுங்க இயலாதவண்ணம் பேருருக்கொண் டான். அவளும் தன் வாயைத் திறந்து கொண்டே போனுள். சரசையின் செருக்கை அடக்க எண்ணிய அனுமன் மேலும் மேலும் பேருருக்கொண்டு பெரிதாகிக்கொண்டே இருந் தான். பின்னர் திடீரென்று தன் வடிவைச் சுருக்கிச் சரசையின் வாயினுள் புகுந்து, அவள் வாயை மூடுதற்குள் வெளியே வந்துவிட்டான். அனுமனின் செயலைக்கண்டு சரசை வியப்புற் ருள். அவன் பராக்கிரமத்தைப் பெரிதும் பாராட்டினுள். தன் இயற்கை உருக்கொண்டு எதிரே தோன்றினுள். அனுமனை நோக்கி, "உன்னல் செய்து முடிக்க இயலாத காரியம்

என்பது எதுவுமில்லை. எந்தச் செயலையும் நிறம்படச் செய்து முடிப்பாய்" என்று வாயார வாழ்த்தி அனுப்பினாள்.

நல்லகாரியங்களில் ஈடுபடும்போது எத்துணை எத்துணையோ இடையூறுகள் வரத்தான் செய்யும். மனிதராலும், மற்ற உயிர்களாலும் இடையூறுகள் பலப்பல நேரிடலாம். லக்ஷியத்தை அடையவொட்டாது நயவுரைகள் பல பேசி வாழ்வைத் திசைதிருப்ப முற்படலாம். உறுதியான உள்ளமுடையவன் இத்துணை இடையூறுகளையும் துணிவுடன் எதிர்கொள்ளுகிறான். உயிருக்கே ஆபத்து வரினும் அதையும் அவன் பொருட்படுத்துவதில்லை. துன்ப துயரங்கள் ஆகிய இடையூறுகளைக் கண்டு மனந்தளர்வதில்லை. சோம்பலுக்கு அவன் ஒருபோதும் இடம் கொடுப்பதில்லை. அனுமன் சோம்பலை அறியாதவன். மேலும் நன்கு கற்றவன். சொல்திறமை வாய்க்கப் பெற்றவன். ஒரு மனிதனிடத்துத் துணிவும், சுறுசுறுப்பும், சொல்திறனும் அமைந்திருந்தால் அவன் ஆற்றுதற்கரிய செயல் என்பது எதுவுமில்லை. அவனை வெல்லுதல் என்பது யாருக்கும் இயலாதகாரியமாகும்.

அனுமன் சரசையின் ஆசியுடன் ஆகாயத்தில் பறந்து போய்க் கொண்டிருந்தான். அப்பொழுது 'அங்காரதாரை' என்ற கொடிய அரக்கி எதிரே தோன்றினாள். அவள் ஆலகால விஷத்தைப்போலத் தீங்கு செய்யவல்லவள். கழுகு போன்று நெடுந்தொலை காணும் கூரிய கண்பார்வை கொண்டவள். பிறைச் சந்திரனைப் போன்று வளைந்த கோரைப் பற்களை உடையவள். நிழலைப்பற்றியே உருவத்தைப் பிடிக்கவல்லவள். அத்தகைய கொடிய அரக்கி அனுமன் எதிரே தோன்றி 'யாரடா' இங்கு வருபவன்? என்று அதட்டினாள். மேலும் அவள் அனுமனை நோக்கி, 'நான் உன்னை விழுங்கப் போகிறேன். எமனே உன்னைக் காப்பாற்ற வந்தாலும் உன்னைத் தின்பதினின்றும் என்னைத் தடுக்கமுடியாது. அதனால் நீயே என்வாயினுள் புகுந்து எனக்கு இரையாய் விடு' என்றாள். அப்பொழுது அனுமன் பயந்து அவள் விருப்பத்தை நிறைவேற்றுபவன் போன்று அங்காரதாரையின் வாயினுள் நுழைந்தான். அவளும் தனது பெருவாயினை மூடிக்கொண்டாள். அனுமன் இறந்தானென்று தருமதேவதை அழுது புலம்பியது. தேவர்கள் செய்வதறியாது வருந்தினர். ஆனால் அனுமனோ, ஒரு நொடிப் பொழுதில் அந்த அரக்கியின் வயிற்றைக் கிழித்துக்கொண்டு வெளியே வந்தான். அப்பொழுது அனுமன் தூணைப் பிளந்துகொண்டு தோன்றிய நரசிம்மமூர்த்தியைப் போன்று தோன்றினான். புதுப்பிறவி பெற்றவன் போன்று பொலிவுற்றுத் திகழ்ந்தானும். அழுது புலம்பிய தருமதேவதையும் தேவர்களும் ஆனந்தப் பெருக்கில் மூழ்கினர்.

அங்காரதாரை சூழ்ச்சியே வடிவெடுத்தவள். முள்ளை முள்ளால் எடுப்பதுபோன்று சூழ்ச்சியை சூழ்ச்சியாலேயே முறியடித்தான் அனுமன். சரசையினிடத்துப்போன்று அங்காரதாரையினிடத்து அனுமன் அதிகம் பேச்சு வைத்துக்கொள்ளவில்லை. அவளைப் பார்த்தவுடனேயே அவள் கொடும் தன்மையை அறிந்துகொள்ளுகிறான். அதனால் காலம் தாழ்த்தாது அவளை அழிக்கத் திட்டமிடுகிறான். விரைந்து செயலாற்றி அரக்கியை அழித்துவிடுகிறான். நெருக்கடியான சமயத்தில் எப்படிச் செயலாற்றவேண்டும்? எவ்வளவு விரைவாக முடிவெடுக்க வேண்டும் என்பதற்கு அனுமனது இச்செயல் எடுத்துக்காட்டாகும். கடல் கடக்கும்போது பலப்பல இடையூறுகள் வருகின்றன. ஆனால் அவைகளால் அனுமன் மனச்சோர்வடையவில்லை. நாளைக்குப் பார்க்கலாமென்று காரியத்தை ஒத்திப்போடவுமில்லை. எடுத்துக்கொண்ட வினையைத் தொடர்ந்து செய்துகொண்டே இருக்கிறான்.

> தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
> தூங்காது செய்யும் வினை

என்னும் குறளுக்கு அனுமன் கடல் தாண்டும் செயல் எடுத்துக்காட்டாகும்.

வந்த இடையூறுகள் அனைத்தினின்றும் விடுபட்ட அனுமன், மேற்கொண்டு எத்துணை இடையூறுகள் வருமோ என்று எண்ணுகிறான். இடையூறுகள் அனைத்தையும் போக்கக் கூடியது ராம நாம ஜபமே என்று நிச்சயித்து ராம நாமத்தை உச்சரிக்கிறான். உடலில் வலிவும், உள்ளத்தில் உறுதியும் உண்டாகின்றன. அப்பொழுது இலங்கையை அடுத்திருந்த பவளமலை மீது பாய்ந்து இலங்கையின் அழகினைக் கண்டு வியப்புறுகிறான்.

---

# சுவாமி துரியானந்தர் ஜீவிதம்

துரிய நிலை

ஜாக்ரதம், சொப்பனம், சுஷுப்தி, துரியம் என்னும் நான்கு நிலைகள் உண்டு. சாதாரண மக்களுடைய மனம் முதல் மூன்று நிலைகளில் மாறி மாறி அமைந்துகொண்டிருக்கும். துரியம் என்னும் நான்காவது நிலையை அடைந்தவர் ஞானியாகின்ருர். பேரானந்தப் பெருநிலை அதை அடைந்தவர்க்கு உரியதாகிறது. தேனீ பூவை அடைந்தவுடன் தேனை அருந்தும் வரையில் ரீங்காரம் செய்துகொண்டிருக்கும். தேனை அருந்த ஆரம்பித்ததும் ரீங்காரம் செய்வது நின்று அமைதி நிலவும். துரியநிலை அடைந்தவர்கள் பேரானந்தத்தை அனுபவிப்பதனல் பேச்சைக் குறைத்து விடுவார்கள். மோனநிலை, சுட்டற்ற பூரணநிலை அவர்களுடைய நிலையாகிறது. உள்ளம் அவ்வுயர்நிலையை அடையும் பொழுது பேசாத ஆனந்த நிஷ்டையில் திளைத்திருக்கிறது. அவ்வுயர்நிலையில் தம் உள்ளத்தை யாண்டும் வைத்திருந்த சுவாமி துரியானந்தருக்குத் துரியானந்தர் என்னும் நாமம் பொருத்தமானதாக அமைகிறது.

இளமைப் பருவம்

1863ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 3ஆம் தேதி கல்கத்தாவில் ஒரு பிராம்மணக் குடும்பத்தில் துரியானந்த சுவாமிகள் தோன்றினர். பெற்ருேர்கள் அவருக்கு ஹரிநாத் சட்டோபாத்யாயர் என்ற நாமகரணம் சூட்டினர்கள். இளமையிலேயே அவருடைய பெற்ருேர்கள் காலமாகிவிட்டார்கள். ஆகையால் அவருடைய தமையனர் அவரை வளர்த்து வந்தார். கல்லூரி புகுமுக வகுப்பு வரையில் அவர் படித்திருந்தார். நல்ல சம்ஸ்காரம் அவர் உள்ளத்தில் பதிந்திருந்தது. நல்ல சம்ஸ்காரத்தை மேலும் வளர்ப்பதில் சிரத்தையாக இருந்தார். தினமும் மூன்று தடவை குளித்து வந்தார். தாம் சமைத்த உணவையே உண்டு வந்தார். நாள்தோறும் கீதை முழுவதையும் பாராயணம் செய்தார். கீதை, உபநிஷதங்கள், சங்கராச்சார்யருடைய நூல்கள் ஆகியவற்றை ஆழ்ந்துபடித்தார். அத்வைதக்கொள்கை அவர் மனதுக்குப் பிடித்தமாக இருந்தது. தம் கொள்கைப் பிரகாரம் வாழ்க்கை நடத்துவதில் நேர்மையாக இருந்தார். அத்வைதக் கொள்கைப்படி யாவும் கடவுள் சொரூபம்ஆகின்றன. கடவுள்தாம் இருக்கின்ருர், கடவுளைத் தவிர வேறு ஒன்றுமில்லை என்பதுதான் அத்வைதம். இக்கொள்கையை அவர் ஏற்றுக் கொண்டதோடு அதன்படி நடக்கவும் முயன்ருர். ஒருநாள் அவர் கங்கையில் நீராடிக்கொண்டிருக்கும்போது முதலை ஒன்றைப் பார்த்தார். நீரை விட்டு வெளியே வந்து முதலையிடமிருந்து தப்பித்துக் கொள்ளவேண்டுமென்ற எண்ணம் அவர் உள்ளத்தில் எழுந்தது. ஆனல் மறுகணமே "நானும் பிரம்மமும் ஒன்ருக இருக்க நான் ஏன் பயப்பட வேண்டும்? நான் சரீரம் அல்ல, நான் ஆத்மா. உலகத்தில் நான் எதைக் கண்டும் பயப்பட வேண்டியதில்லை. அப்படியிருக்க முதலையைக்கண்டு நான் ஏன் ஓடவேண்டும்?" என்று எண்ணலானர். உறுதியான மனப்பான்மையோடு கங்கையில் நின்ற இடத்திலிருந்து விலகிப்போகாது நின்றுகொண்டிருந்தார். கரையிலிருந்தவர்கள் மரணத்தை வலிய ஏற்றுக்கொள்கிருர் என்று எண்ணினர்கள். ஆனல் தம்முடைய கொள்கையைச் சோதிப்பதற்காகவே அச்சூழ்நிலையில் அவர் அங்ஙனம் நடந்துகொண்டார். வாழ்க்கை என்பது விடுதலைப் பேற்றை அடைவதற்காக அமைந்திருக்கிறது என்பதை அறிந்து விடுதலைப் பேறை அடைவதையே தம் லக்ஷியமாகக்கொண்டார்.

ஸ்ரீ இராமகிருஷ்ணருடன் தொடர்பு

மரம் பழுத்துவிட்டால் வெளவாலை வாவென்று அழைக்க வேண்டிய அவசியமில்லை. மனத்தைப் பக்குவப்படுத்தி வந்தால் அருள்நாட்டம் தீவிரமாகும். உண்மையான அருள்நாட்டம் உண்டாகும்பொழுது வழிகாட்டுவதற்குக் குரு வந்து அமைவார். ஹரிநாத் இளமையிலேயே நல்லொழுக்கமுடையவராகவும், பாரமார்த்திக வாழ்வில் பற்றுடையவராகவும் இருந்தார். அவருக்கு வயது பதினன்கு ஆகும்பொழுது ஸ்ரீ ராமகிருஷ்ணரைச் சந்திக்கும் வாய்ப்புக் கிடைத்தது. அவர் சந்தித்த நிகழ்ச்சியை அவரே விளக்கியிருப்பதாவது : "பக்தர் ஒருவர் வீட்டுக்கு முன் ஒரு வாடகை வண்டி

வந்து நின்றது. அதிலிருந்து இரண்டு அன்பர்கள் இறங்கினார்கள். அவர்களுள் ஒருவர் மெலிந்த உடல் உடையவராகவிருந்தார். அவருடன் வந்த மற்றவர் அவரைத் தாங்கிப் பிடிக்க அவர் வண்டியிலிருந்து இறங்கினார். உலகத்தையே மறந்தவராக அவர் தென்பட்டார். அவருடைய முகம் தெய்வீக ஒளியை வீசிக்கொண்டிருந்தது. சுகதேவரைப் போன்று அவர் தென்பட்டார். அவர் உடலை ஒருவர் தாங்கிப் பிடித்துக்கொண்டு வரத் தள்ளாடி நடைபோட்டுக்கொண்டு வீட்டுக்குள் நுழைந்தார். சிறிது சிறிதாக அவருக்கு உலக ஞாபகம் வந்தது. அறையின் சுவரில் காளிகாதேவியின் படம் மாட்டியிருந்ததைப் பார்த்தார். காளிகாதேவியின் படத்துக்கு முன் தலை வணங்கினார். கிருஷ்ணனும் காளியும் ஒன்று என்று விளக்கிக் கூறும் பாடலைப் பாடினார். அவர் பாடியது அங்கிருந்தவர்களுடைய உள்ளத்தை எல்லாம் உருக்கியது.'' இங்ஙனம் சுவாமி துரியானந்தர் ஸ்ரீ இராமகிருஷ்ணரைப் பற்றி முதல் முதல் சந்தித்தபொழுது கூறியுள்ளார்.

ஸ்ரீ இராமகிருஷ்ணரை இரண்டு அல்லது மூன்று ஆண்டுகளுக்குப் பின் மறுபடியும் தக்ஷிணேசுவரத்தில் சந்தித்தார். ஸ்ரீ ராமகிருஷ்ணரைப் பார்க்க வேண்டுமென்ற ஆவல் அதிகரிக்கவே சந்தர்ப்பம் கிடைக்கும் பொழுதெல்லாம் அவரைச் சென்று காணலானார். ஸ்ரீ ராமகிருஷ்ணர் விடுமுறை அல்லாத நாள் பார்த்துத் தம்மிடம் வரும்படி ஹரிநாதரைக் கேட்டுக்கொண்டார். விடுமுறை நாட்களில் பக்தர்கள் கூட்டம் அதிகமாக இருக்குமென்றும் தனித்து வந்தால் அதிகம் பேச வாய்ப்பு இருக்குமென்றும் ராமகிருஷ்ணர் அவரிடம் கூறினார். ஹரிநாத் ராமகிருஷ்ணரோடு தாராளமாகப் பழகிப் பேசுவதற்கு உரிய சந்தர்ப்பம் வந்தது. ராம கீதை என்ற புஸ்தகம் ஹரிநாதருக்கு மிகப் பிரியமானதாகும். ஹரிநாத் அத்வைதக்கொள்கையில் ஆர்வமுடையவர் என்பதை ஸ்ரீ ராமகிருஷ்ணர் அறிந்திருந்தார். ஹரிநாத் ஸ்ரீ ராமகிருஷ்ணரோடு செய்த சம்பாஷணைக்கிடையில் ஒருநாள் அவர் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் பகர்ந்ததாவது: "தக்ஷிணேசுவரத்தில் தங்கள் சந்நிதிக்கு முன் வந்தால் என் உள்ளம் பரம சாந்தி அடைகிறது. கல்கத்தாவில் வேறு எங்குச் சென்றாலும் என் உள்ளத்தில் சாந்தி உண்டாவதில்லை." அதற்கு ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்ந்ததாவது: ''நீ, ஹரியினுடைய தொண்டன் ஆவாய். ஹரியின் தொண்டன் எங்கிருந்தாலும் ஆனந்தமாக இருக்க வேண்டும்." ஸ்ரீ ஹரிநாத் பகர்ந்ததாவது: ''நான் ஹரியின் தொண்டன் என்பது எனக்குத் தெரியாது." ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்ந்ததாவது: ''நீ, ஹரியின் தொண்டன் என்று அறிந்தால் என்ன, அறியாவிட்டால் என்ன! நீ அறியாததினால் உண்மை பொய்யாகப் போய்விடுமா! நீ ஹரியினுடைய தொண்டன்தான்." இங்ஙனம் ஸ்ரீ ராமகிருஷ்ணர் கூறியது ஹரிநாதருக்குத் தாம் ஹரியின் தொண்டன் என்பதை ஊர்ஜிதப்படுத்துவதாக இருந்தது.

ஹரிநாத் இளமையிலிருந்தே பெண்பாலர்களை வெறுத்து வந்தார். சிறுமிகளைக்கூடத் தம் அருகில் வர அனுமதிக்கமாட்டார். பெண்பாலர்களைப் பற்றி ஒரு சமயம் ஸ்ரீ ராமகிருஷ்ணர் அவரிடம் பேசினார். "தாங்கள் அந்த விஷயத்தை என்னிடம் பேசாதீர்கள். என்னால் அதைக் கேட்க முடியாது" என்றார் ஹரிநாத். ''நீ அறிவிலிபோன்று பிதற்றுகின்றாய். பெண்பாலர்களை வெறுக்கின்றாய். எதற்கு நீ அவர்களை வெறுக்கவேண்டும்? பெண்பாலர்களெல்லாரும் பராசக்தியின் தோற்றங்களாவார்கள். அவர்களை உன்னுடைய தாயாகக் கருதிப் பணிவோடு அவர்கள் முன் தலைவணங்கு. அப்பொழுதுதான் நீ காம உணர்ச்சியிலிருந்து விடுபட முடியும். நீ அவர்களை எவ்வளவுக்கெவ்வளவு வெறுக்கின்றாயோ, அவ்வளவுக்கவ்வளவு அவர்களுடைய மோகவலையில் அகப்பட்டுக் கொள்வாய்." இங்ஙனம் ஸ்ரீ ராமகிருஷ்ணர் கூறிய வார்த்தைகள் ஹரிநாதருடைய உள்ளத்தில் ஊடுருவிப் பாய்ந்தன. அதுமுதல் அவர் தாம் பெண்பாலரிடம் கொண்டிருந்த மனப்பான்மையை அடியோடு மாற்றி அமைத்துக் கொண்டார். ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஆண்பாலர்களுக்குப் பெண்பாலர்களை எல்லாம் பராசக்தி சொரூபங்களாகக் கருதவேண்டும் என்று புகட்டியது போலவே பெண்பாலர்களுக்கும் ஆண்பாலர்களை எல்லாம் சிவசொரூபங்களாகக் கருதவேண்டும் என்று புகட்டினார். காம உணர்ச்

சியை இருபாலர்களும் வென்ருக வேண்டும் என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்வார். ஸ்ரீ ராமகிருஷ்ணரை ஒருநாள் காம உணர்வைவெல்லுவது எப்படி? என்று ஹரிநாத் கேட்டார். காமத்தைப்பற்றி நினைப்பது காமவுணர்வை வெல்லத் துணைபுரியாது. காமத்தை ஒழிக்கவேண்டும் என்று எண்ணும்பொழுதே காமத்தைப்பற்றிய எண்ணம் வந்துவிடுகிறது. காமத்தைத் தெய்வத்தின்பால் திருப்புதல் வேண்டும். மனத்தைத் தெய்வத்தின்பால் திருப்பும்பொழுது காமம் தடையாகஇருப்பதற்குப் பதிலாகச் சாதனைக்குத் துணையாக அமைகின்றது. காமத்தால் வருகின்ற உணர்வைத் தெய்வத்தின்பால் திருப்புவதே காமத்தை வெல்லுதற்கு உபாயமாகும். ஸ்ரீ ராமகிருஷ்ணர் இங்ஙனம் பகர்ந்தது ஹரிநாதருக்குப் புதுமுறையாக இருந்தது. அம்முறையை அவர் மிகவும் வரவேற்ருர். எந்தச் சக்தியையும் அழிக்கமுடியாது. ஒரு சக்தியை மற்ரெரு சக்தியாக மாற்றி அமைக்கலாம். இதை விஞ்ஞானம் நிரூபித்து வருகிறது. நம்மிடத்திலுள்ள உணர்ச்சியை அழிக்க முடியாது. கீழான உணர்ச்சியை மேலான உணர்ச்சியாக மாற்றி அமைக்கலாம். உணர்ச்சி உடல் அழகில் மயக்குண்டு, உடல் இன்பத்தை நிறைவேற்றுவதற்குப் பயன்படுத்தப்படும்பொழுது அது கீழான உணர்ச்சியாகிறது. இறைவன் மகிமையை உணர்ந்து, இறை இன்பத்தில் மூழ்கி இருப்பதற்கு உணர்ச்சியைப் பயன்படுத்துகிற பொழுது அது மேலான உணர்ச்சியாக மாறுகிறது. பெண்களையெல்லாம் பராசக்தி சொருபங்களாகப் பார்க்கும்பொழுது மேலாம் உணர்வு ஓங்குகிறது. உடல் சம்பந்தமான காமத்தைத் தெய்வீக சம்பந்தமான காமமாக மாற்றி அமைக்க வேண்டுமென்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஹரிநாதருக்குப் போதித்தார். அப்போதனைக்குப்பின் ஹரிநாதர் தம் மனப்பாங்கை முற்றிலும் மாற்றியமைத்துக் கொண்டார்.

ஹரிநாத் அத்வைதத்தில் ஆழ்ந்த பற்றுடையவராக இருந்தார். அத்வைதத்தை விளக்குகின்ற சங்கரருடைய நூல்களை ஆழ்ந்து படித்தார். அந்நூல்களை ஆழ்ந்து படிப்பதிலேயே மனதைச் செலுத்தியவராக ராமகிருஷ்ணரிடம் சிலநாட்கள் போகாமல் இருந்துவிட்டார். ஹரிநாத் தம்மிடம் வராதிருப்பதை ஸ்ரீ ராமகிருஷ்ணர் கவனித்துவிட்டார். ஹரியின் நண்பர்களிடம் 'ஹரிநாத் ஏன் இப்பொழுது இங்கு வருவதில்லை? அவனைப்பற்றி உங்களுக்கு ஏதாவது தெரியுமா?' என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் வினவினர். அவர் இப்பொழுது வேதாந்த ஆராய்ச்சியில் மூழ்கி இருக்கிருர் என்று அவர்கள் பதில் கூறினர்கள். சில நாட்கள் கழித்து ஹரி தம்மிடம் வந்தபொழுது ஸ்ரீ ராமகிருஷ்ணர் அவரிடம் பகர்ந்ததாவது: "வேதாந்த ஆராய்ச்சி பண்ணுவதிலும், வேதாந்தக் கருத்துக்களைத் தியானம் பண்ணுவதிலும் நீ மூழ்கியிருப்பதாகக் கேள்விப்பட்டேன். அது மிகவும் நல்லது. பிரம்மம் ஒன்றே சத்தியம். மற்றவை யாவும் அசத்தியப் பொருள்கள். இதுதானே வேதாந்தத்தின் சாரம். இதற்கு அப்பால் அது என்ன புகட்டுகிறது? நீ அநித்தியத்தை விட்டுவிட்டு நித்தியத்தைப் பற்றவேண்டியது தானே! ஏன் அவ்வாறு பற்ருது இருக்கின்ருய்?" ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொன்னது முற்றிலும் உண்மை என்பதை ஹரிநாத் ஏற்றுக்கொண்டார். எவ்வளவுதான் ஒருவன் படித்தாலும் அவன் உண்மையை அறிந்துகொள்ள முடியாது. ஆத்மீக அனுபவ ஞானத்துக்கு உண்மை விளங்குவது போன்று சாதாரண அறிவுக்கு உண்மை விளங்காது. உண்மை நூல்களில் இல்லை. நித்தியத்தைப் பற்றிக்கொண்டு அநித்தியத்தை விட்டுவிட வேண்டும்என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்ந்தது ஹரிக்கு விளங்கியது. உபநிஷதத்தில் திரும்பத் திரும்பச் சொல்லப்படும் கருத்து ஒன்றுக்கு ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய கூற்று விளக்கமாக இருந்தது. உபநிஷதத்தில் அடிக்கடி கூறப்படும் கருத்தாவது: "ஆத்மா புஸ்தகத்தின்மூலமாகவும் அறிவின் மூலமாகவும் அறியப்படுவது அன்று." ஸ்ரீ ராமகிருஷ்ணர் மேலும் ஹரிக்குப் பகர்ந்ததாவது: "கேட்டல், சிந்தித்தல், தெளிதல் ஆகிய முறைகளை நீ கையாளவேண்டும். பிரம்மம் ஒன்றே சத்தியப்பொருள்; மற்றவை யாவும் அநித்தியப் பொருள்கள் என்பதை நீ முதலில் கேட்கவேண்டும். பிறகு நீ கேட்ட கருத்தை உன் அறிவைக்கொண்டு நன்ருகச் சிந்திப்பதன் மூலம் அக்கோட்பாட்டின் சரியான பொருள் உன் மனதில் ஆழ்ந்து பதியும். அதன் பின்

அநித்தியமாகிய உலகில் இருந்து உன் மனதை விடுவித்து நித்தியமாகிய பிரம்மத்தைத் தியானித்துத் தெளிவடை. இந்த முறையில் தான் ஆத்மஞானம் பெறமுடியும்." இதைக் கேட்டபிறகுதான் தாம் என்ன செய்யவேண்டும் என்பது ஹரிக்கு விளங்கியது. அன்றுமுதல் நூல்களைப் படிப்பதில் கருத்துச் செலுத்து வதைக்காட்டிலும் சாதனைசெய்வதில் கருத்து மிகச் செலுத்தினர். மற்றெரு கருத்தில் இப் பொழுது ஹரிக்கு ஐயம் ஏற்பட்டது. மனிதன் எவ்வளவுதான் முயன்றாலும் கடவுளின் அருள் இல்லாவிட்டால் ஆத்ம ஞானம் பெறமுடி யாது என்பதில் ஹரிக்கு ஐயம் இருந்து வந் தது. இக் கருத்தையும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஒரு தடவை உறுதிப்படுத்தினர். கடவுள் அருள் இல் லாவிட்டால் "அறிவினுலோ, சாதனையினுலோ ஒன்றையும் சாதித்துவிட முடியாது. மனித னுடைய முயற்சிக்கு ஓர் எல்லை உண்டு. இப் பிரபஞ்சம் மனிதன் மீது செலுத்தும் ஆதிக் கத்தை அகற்றுவதற்கு மனிதன் முயற்சி மட்டும் போதாது. ஈசன் அருளும் மனித முயற்சியோடு சேரவேண்டும். காம காஞ்ச னத்தை அகற்றுவது அவ்வளவு சுலபம் என்று எண்ணுகின்றாயா! ஈசன் அருள் இருந்தால் தான் அவற்றை உன் உள்ளத்திலிருந்து அகற்ற முடியும்." இதைக் கேட்டபின்புதான் சுயமுயற்சி யோடு ஈசனுடைய அருளும் அமையவேண்டும் என்ற உண்மை ஹரிக்கு விளங்கியது.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் இறைவனின் புகழைக் குறித்துப் பாடல் ஒன்று பாடினர். அவர் கண்களிலிருந்து நீர் பெருக்கெடுத்து வந்து தரையை நனைத்தது. இங்ஙனம் கண்ணீர் ததும்பப் பாடி உருகிய நிலையைப் பார்த்த ஹரி நாத் உள்ளமும் உருகலாயிற்று. அவர் கண் களிலிருந்தும் நீர் பெருகலாயிற்று. தெய்வத் திடம் தம்மை முழுதும் எப்படி ஒப்படைக்கிற தென்பதை ஸ்ரீராமகிருஷ்ணரிடமிருந்துஹரிநாத் அறிந்துகொண்டார். இப்பிறவியிலேயே விடு தலைப் பேறு அடைய வேண்டுமென்ற பெரும் விருப்பம் அவரிடமிருந்தது. கடவுள் காட்சி கிட்டவில்லையே என்ற துக்கத்தினுல் சில சம யம் புலம்புவார். ஒருநாள் இரவு தக்ஷிணேசு வரத்தில் கங்கைக்கரையில் இருந்துகொண்டு ஹரிநாத் ஓலமிட்டு அழுதார். அவர் அங் கிருந்து தக்ஷிணேசுவரத்துக்குத் திரும்பியதும் அவரிடம் ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்ந்ததாவது : "யார் ஒருவர் கடவுளுக்காகக் கதறிக் கதறி அழுகின்ருரோ அவருக்குக் கடவுள் அருள்புரி கின்ருர். கடவுளைக்குறித்து உகுக்கும் கண் ணீர் பல ஜன்மாந்திரங்களில் உள்ளத்தில் சேர்ந்துள்ள அழுக்குகளை எல்லாம் கழுவி விடு கிறது. கடவுளைக் குறித்துக் கண்ணீர் உகுப்ப வன் பாக்கியவானுகின்றுன்."

மஹான்களுக்குப் பணிவிடை பண்ணுவது மனதை உயர்த்துகிறது. மஹான்களுடைய சாந்நித்யம் நம்மிடத்தில் குண்டலினி சக் தியை எழுப்புகிறது. ஒரு தடவை தக்ஷிணேசு வரத்திலுள்ள பஞ்சவடியில் ஹரிநாத் தியானம் செய்து கொண்டிருந்தார். அப்பொழுது அவ ருக்கு ஆழ்ந்த தியானம் கூடியது. ஸ்ரீ ராம கிருஷ்ணரும்ஆங்கு வந்தார். ஸ்ரீ ராமகிருஷ்ணர் அருகில் வந்ததும் ஹரிநாதர் குண்டலினி சக்தி எழுவதை உணர்ந்தார். ஸ்ரீ ராமகிருஷ்ணரும் அப்பொழுது பரவச நிலையில் இருந்தார்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் பேரன்பின் வடிவமாக இருந்தார். தூய இளைஞர்களைக் காணும் பொழுது பேரானந்தம் அடைவார். அவர் களிடம் பேரன்பு காட்டுவார். அப்படி அவர் பேரன்பு காட்டியவர்களுள் ஹரிநாதரும் ஒருவ ராவார். ஹரிநாதரை அடிக்கடி தக்ஷிணேசுவரம் வரவேண்டுமென்று கேட்டுக் கொண்டார். ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஹரிநாதரிடம் பகர்ந்தது வது : "நீ கடவுளுக்கு மிகவும் பிரியமான குழந்தை. உன்னிடமிருந்து நான் எதையும் எதிர் பார்க்கவில்லை. நீ கடவுள் காட்சி பெற வேண்டுமென்று நான் விரும்புகிறேன். நீ இங்கு வருவாயானுல் உனக்கு விரைவில் கடவுள் காட்சி கிடைக்குமென்று அம்பிகை என்னிடம் சொல்கின்ருள். ஆகையால் உன்னை இங்கு வருமாறு வற்புறுத்துகிறேன்."

ஹரிநாதரும் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் பேரன்பு கொண்டிருந்தார். ஸ்ரீ ராமகிருஷ்ணரிடமிருப்ப தில் அவர் பேரானந்தம் அடைந்தார். ஹரிநாத ருக்கு உடலில் சில வியாதிகள் இருந்தன. ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் சென்றுவிட்டால் அவ் வியாதிகளால் தமக்கு எந்தவிதமான தொந் தரவும் இருப்பதில்லை என்று ஹரிநாதர் கூறுவ துண்டு. (தொடரும்)

# குணமது கைவிடேல்

( சுவாமி துருவானந்தர் )

நம் நாட்டை யோக பூமி என்று சான்றோர் அழைக்கின்றனர். ஏன்? முக்தியாம் பெருநிலை யெய்த பாரத நாட்டில்தான் பிறப்பெடுக்க வேண்டுமாம்.அதனால்தான் பாருக்குள்ளே நல்ல நாடு எங்கள் பாரத நாடு என்று இந்நாட்டைப் போற்றுகிறோம். அத்தகைய சீலம் பொருந்திய இந்த நாட்டிலே பூரிஜகந்நாதம் என்று ஒரு புனித நகரம் இருக்கிறது. பரமாத்மாவின் முழு அம்சமும் அந்த க்ஷேத்திரத்தில் உறைந்து உலகை ரக்ஷித்து வருகிறது. இந்நகருக்கு அருகில் பில்வகாம் என்ற சிற்றூரிலே நாராயண சாஸ்திரியார், கமலாபாய் என்ற தம்பதிகள் வாழ்ந்து வந்தனர். தூய ஒழுக்கமும், இறைவன்மீது தளரா நம்பிக்கையும் கொண்ட இத்தெய்விகத் தம்பதிகள் இவ்வுலகில் குறை ஏதுமின்றி வாழ்ந்து வந்தனர். ஆனாலும் குறையே யில்லாத இல்லறத்தான் உண்டா? நாராயண சாஸ்திரிகள் இறைச் சிந்தனையில் இல்லற வாழ்வை மறந்திருந்தாலும் மகவில்லா மனைவியின் மனநிலையை அவர் உணர்ந்திருந்தார். ஆண்டுகள் கழிந்தன. குழந்தையில்லாக் குறை நிலையை எண்ணி எண்ணி வருந்தினர்கள்.பரமனிடம் அழுதுவேண்டினார்கள். வேண்டுவார்க்கு வேண்டுவதை வழங்குவதன்றோ அவருடைய அருள்! ஒரு நாள் பக்தர் நாராயண சாஸ்திரியார் கனவிலேஅரங்கநாதன் பகர்ந்ததாவது: 'அன்பா! உன் விருப்பத்தை நிறைவேற்றி இவ்வையகம் வாழ ஒரு தெய்வமகனைத் தர நாம் திருவுள்ளம் கொண்டோம்.' கனவு கலைந்தது. நாராயண சாஸ்திரி தம் துணைவியை அழைத்து 'இறைவனிடம் ஏதாவது வேண்டும் என்று கேட்டாயா?' என்றார். "ஆம் பிரபு, பிள்ளை வேண்டும் என்று கேட்டு வருகிறேன்" என்றாள் அவ் அம்மையார்.

உரிய காலம் வந்தது. அந்தத் தேவியின் கர்பத்தில் சிசுவாகத் தெய்வாம்சம் பொருந்திய ஜயதேவனாகிய நான் தோன்றினேன். அவனவன்செய்கிற பாப புண்ணியத்தை ஒட்டி அவனவனுக்கு ஏழை, பணக்காரன், நல்லவன், கெட்டவன் என்கின்ற பலதரப்பட்ட சூழ்நிலைகளில் பிறக்கும் வாய்ப்பு அமைகிறது.பண்ணிய பயிரில் புண்ணியம் தெரியும்என்பது பழமொழி. பிறந்து, வளர்ந்து வருகிற சூழ்நிலையை முன்னிட்டு ஒருவன் செய்த வினைப்பயன்களை அறிந்து கொள்ளலாம். நாராயண சாஸ்திரியார், கமலாபாய் செய்த தவத்தின் வினைவாக நான் அத்தம்பதிகளுக்குப் பிள்ளையாகப் பிறந்தேன். இப்பூமியிலே பிறந்தவுடன் எனக்கு ஜயதேவன் என்று பெயரிட்டார்கள். என்னுடைய குழந்தைச் செயலைக் கண்டு வியப்புற்றோரும், என்னிடம் அமைந்த இறையுணர்வைக் கண்டு வியந்தோரும் எண்ணற்றவர். சிறுவனை நான் நல்ல பராமரிப்பில் வளர்ந்து இளைஞனானேன். தாய் தந்தையர் தெய்விக வாழ்க்கை வாழ்ந்தவர்கள். உலக சுகத்தை விட்டு என் பொருட்டு வாழ்ந்த அந்தத் தம்பதிகளுக்கு எனக்கு மணம் முடித்துப் பார்க்க வேண்டும் என்ற எண்ணம் ஏன் வந்ததோ தெரியவில்லை. இல்லறத்தில் ஈடுபட்டவர்கள் யாரும் இந்த எண்ணத்திலிருந்து தப்ப முடியாது போலும்!

எனக்கு மணம்முடித்து வைத்தனர் பெற்றோர். நான் இல்லற வாழ்வை மேற்கொண்டேன். ஆனால் இல்லற வாழ்வு எனக்கெந்தவித இடையூறையும் தந்துவிடவில்லை. இல்லத் துணைவியாக அமைந்த பெண் தெய்விக இயல்புபடைத்தவள். பாரமார்த்திக வாழ்விலே எனக்குப் பெருந்துணையாக அவள் இருந்தாள் என இயம்பலாம். வீட்டிலே நாள்தோறும் பஜனை, விருந்தோம்புதல், ஸத்காலட்சேபம் போன்ற ஸத்கைங்கரியங்கள் நடந்துகொண்டே இருந்தன. இப்படி இருக்கையில் பரம்பரையாக இருந்த ஆஸ்தி பஞ்சாய்ப் பறந்து போய்விட்டது. வறுமை என்னை வாட்டுவதற்கிடையில்அரசன் என்காவியத்தின் பெருமையையும் நான் மக்கள் மத்தியில் புகழ்பெற்று இருப்பதையும் கண்டு மனம் பொறாதவனாய் அவனுடைய பாடல்களை மட்டும் மக்கள் பாடி மகிழவேண்டும் என விரும்பினான். ஆனால் இறைவனுடைய கருணை வேறு விதமாக இருந்தது. இறைவனும் அவன் கனவில் தோன்றி அவனுக்கு நல்லறிவு புகட்டினார். கல்விச்செருக்கு எளிதில் போகாது. இறைவன்

அருள் இருந்தால் அன்றி அது மனிதனை எப் பாடுப்படுத்தும் என்பது இந்தச் சம்பவத்தி லிருந்து விளங்குகிறதல்லவா ?

உடைமையும் வறுமையும் ஒருவழி நில்லா என்ற கோட்பாட்டுக்கேற்ப வீட்டு வறுமை நாளுக்குநாள் எனக்கு விரக்தியை ஊட்டியது. அப்படிப்பட்ட சூழ்நிலையில் நான் வீட்டிலிருக்க விரும்பாது ஏகாந்தமான இடத்தை நாடிச் சென்று தியானத்தில் ஆழ்ந்திருப்பது வழக்கம். அங்ஙனம் ஒரு தடவை ஏகாந்தத்தில் இருந்த பொழுது பகவன்தாஸ் என்ற பக்தர் என்னைத் நமது வீட்டிற்கு அழைத்துப் போக விரும்பி னூர். துறவிகளுக்குச் சேவை செய்து அதன் மூலம் உய்வடைய வேண்டும் என்ற இலட்சி யம் உடையவர் அந்தப் பக்தர். அவர் பெரிய வியாபாரியாக இருந்தார். என்னை அவர் வீட்டுக்கு அழைத்துச் சென்று பாதபூஜை செய்து உபதேசம் பெற்றூர். எல்லாம் முடிந்த பிறகு என் வறுமைநிலை போக ஏராளமான பொருள்களையும், விலைமதிப்புள்ள துணிகளை யும் கொடுத்து உபசரித்து ஒரு ரதத்தில் ஏற்றி அனுப்பினூர்.

வழிமுழுவதும் இறைவன் திருநாமத்தை ஜபித் துக்கொண்டே ரதத்தில் சென்றேன். வழியில் கொள்ளைக் கூட்டத்தினர் என்னிடம் இருந்த பொருள்களை எல்லாம் அபகரித்துக்கொண்டு என்னைக் கொல்ல அவர்களுள் ஒருவன் வாளைத் தூக்கினூன். திடீரென்று ஒரு புலி அவன்மேல் பாய்ந்து அவனைக் கொன்றுவிட்டு ஓடிவிட்டது. புலியைக் கண்டதும் மற்றக் கொள்ளைக்காரர் கள் ஓடிவிட்டனர். சிறிது நேரத்தில் ஆங்கு காட்டுக்கு வேட்டைக்கு வந்திருந்த அரசன் என்னைச் சந்தித்தான். அவ்வரசன் பக்திமான். அவன் எனக்கு நேர்ந்த விபத்தை அறிந்து அரண்மனைக்கு அழைத்துச் சென்று எனக்கு வேண்டிய உபசாரம் செய்தான். என்னைக் குருவாக ஏற்றுக் கொண்டு என்னிடம் பக்தி மிகச் செலுத்தினூன்.

அம்மன்னன் தாராள சிந்தையுடையவன். வந்தவர்களுக்கெல்லாம் அவரவர் நிலையை அனுசரித்துப் பொருள் வழங்கினூன். காட்டில் என் பொருளைக் கொள்ளையடித்த கள்வர்களும் ஆங்கு அரசனிடம் பொருள் வாங்க வந்தனர். நான் அங்கு இருப்பதைப் பார்த்ததும் அச்சத் தால் நடுநடுங்கினர். அவர்களின் அச்சத்தைப் போக்கி அவர்களுக்கு வேண்டிய பொருள்களை அரசனிடம் இருந்து பெறுமாறு செய்தேன். என் செயலைக் கண்ட அவர்கள் தங்கள் தீயசுபா வத்தைவிட்டுவிட்டு நல்லவர்களாகமாறினூர்கள்.

இன்னு செய்தாரை ஒறுத்தல் அவர் நாண
நன்னயம் செய்து விடல்

என்ற பொய்யா மொழிக்கு ஏற்ப நற்குணத் தைக் கடைப்பிடித்து வந்த நான் இறுதியில் தியவர்களுக்கு நன்மை செய்ததன் மூலம் வெற்றி கண்டேன். நற்குணத்தைக் கைவிடாது பின்பற்றினூல் நலனே விளையும் என்பது தேற் றம். 'குணமது கைவிடேல்' என்பது இக்கதை யின்மூலம் விளக்கம் பெறுகிறது.

---

## ஸ்ரீ ராமகிருஷ்ணரின் தெய்வீகக் காட்சி

**"அன்றொருநாள் அதுவரை அனுபவித்திராத அளவுக்குத் துக்கம். ஏங்கித் துடிக்கும் நெஞ்சத்தில் சகிக்க முடியாத வேதனை. இத்தனை நாளாகியும் அன்னையின் தரிசனம் கிட்டவில்லையே என்ற ஏக்கம்! இனிமேல் நிச்சயமாகத் தேவியின் தரிசனம் கிட்டாது என்ற எண்ணம் என்னை அணு அணுவாகக் கொன் றது. எனக்கு நானே சொல்லிக்கொண்டேன். 'இனிமேலும் இவ்வுலகில் வாழ்ந்து என்னபயன்?' இந்நிலை யில் திடீரென்று என் கண்கள் கோவில் சுவரில் தொங்கவிடப்பட்டிருந்த வாளின்மீதுபட்டது. இனி இதுதான் என் வாழ்விற்கு ஒரே வழி என்ற எண்ணத்துடன், வெறிபிடித்தவன் போன்று வாளைக் கையிலெடுத்தேன்...திடீரென்று பராசக்தியின் திவ்யக்காட்சி. வீடுகளும், கதவுகளும், கோவில்களும் எல்லாம் மறைந்தன. அலைபுரண்டோடும் கடல்போல் அருட்ஜோதி வெள்ளம் 'அங்கிங்கெனுதபடி எங்கும் பிரகாசமாய்' என்னைச் சூழ்ந்தது. பேரின்பப் பேற்றில் மூழ்கினேன். திக்குமுக்காடிய நான் சுயநினைவற்றேன்." இங்ஙனம் ஸ்ரீ ராமகிருஷ்ணர் தம் அனுபவத்தைக் கூறினூர்.**

# சங்க இலக்கியங்களில் சமயக் கருத்துக்கள்

( வித்துவான் ஆதி. பாலசுந்தரன் M. A. )

தமிழ் நாட்டிற்கு உரிய பழமையான தெய்வம் முருகன். நாளடைவில் கார்த்திகேயன், சுப்பிரமணியன் என்றெல்லாம் வழங்கப்பட்டான். கார்த்திகைப் பெண்கள் அறுவரால் வளர்க்கப் பெற்றவன் ஆதலால், கார்த்திகேயன் என வழங்கப்பட்டான். கார்த்திகேயனுகிய முருகனுக்கு ஆறுமுகங்கள் சொல்லப்பட்டன. அவ் ஆறு முகங்களுக்கும் உரிய செயல்கள் கூறப்படுகின்றன. பன்னிரண்டு கைகளுக்கும் பன்னிரண்டு செயல்கள் சொல்லப்படுகின்றன.

“போர்க்களத்தில் பகைவர்களை வெல்லுவது புறத்திணை” என்று சங்ககாலத்தில் சொல்லப்பட்டது.

“அகப்பகையை அதாவது பொறிபுலன்களால் ஏற்படும் ஆசைகளை வெல்லுவதுதான் உண்மையான வெற்றி ” என்று பிற்காலத்தில் புறத்திணைக்குப் புதியதோர் விளக்கம் சொல்லப்பட்டது.

தலைவன் தலைவியருக்கு இடையே ஏற்படுகின்ற உறவை விளக்கிக் கூறுவது சங்ககால அகத்திணை.

நாளடைவில் கடவுளுக்கும் அடியார்களுக்கும் ஏற்படுகின்ற உறவை நாயகன் நாயகி பாவனையில் பக்தி மார்க்கத்தில் விளக்கிக் கூறும் பகுதியாக அகத்திணை மலர்ச்சி பெற்றது.

ஜைனரும் பௌத்தரும் கணம், சங்கம் என்ற அமைப்புக்களைக் கொண்டு பலர் சேர்ந்து தங்கள் சமய உண்மைகளை ஆராய்ந்தனர்.

நாயன்மார்கள் பலர் சேர்ந்து தலயாத்திரை செய்து சிவ வழிபாடு செய்தனர். கூட்டு வழிபாடு செய்தனர். ஒருவர் பாட அதனைப் பின் பற்றிப் பலரும் பாடினர்.

காலந்தோறும் நாகரிகம் கலக்கின்றபொழுது ஏற்பட்ட இம்மாற்றங்களைப் போல, சங்க காலத்தில் முருகனுக்கு இயற்றப்பட்ட வழிபாட்டு முறைகளும், முருகனைப்பற்றிச் சொல்லப்பட்ட கருத்துக்களும் மாற்றம் பெற்றன.

தைத்திரிய ஆரண்யகத்தில் சுப்பிரமணியன் என்ற பெயர் காணப்படுகின்றது. சுப்பிரமணியன் என்ற பெயர் கொண்ட இந்திரனுடைய மெய்க்காப்பாளராக அக்கினியும், வாயுவும் தைத்திரிய ஆரண்யகத்தில் சொல்லப்படுகிறார்கள்.

அந்தணர் நடத்தும் யாகங்களுக்கு எந்த விதத் தீங்கும் நேராதபடி காப்பவன் முருகன். திருமால், இந்திரன், சிவன் ஆகியோரைக் கொண்ட தேவர் கூட்டத்தை முருகன் வரவேற்கிறான்.

சங்க காலத்தில் ஒருவிதமாக அமைந்திருந்த முருகவழிபாடு காலப்போக்கில் மாறியமைந்ததை நாம் காணலாம். சங்ககாலத்தில் தமிழர்கள் ஒருவிதமாக முருகனைப் போற்றி வழிபாடு செய்து வந்தனர். வைதிக சமயக்கருத்துக்கள் தமிழ் நாட்டில் பரவத் தொடங்கியதும் முருக வழிபாடு முறையும் மாறத் துவங்கியது.

“பக்தியுடன் எவர் தனக்கு இலை, மலர், பழம், நீர் இவைகளைக் கொடுக்கின்றனரோ அந்த உண்மைப் பக்தரின் நிவேதனத்தை நான் ஏற்றுக் கொள்ளுகிறேன்.”

“நான் யாவருக்கும் ஒன்றே; விரோதியும் பந்துவும் எனக்கில்லை; ஆனல், எவர் என்னைப் பக்தியுடன் உபாசிக்கின்றனரோ அவர்கள் என்னிடமே இருக்கின்றனர். நான் அவர்களிடமே இருக்கின்றேன்” என்ற பகவத்கீதையின் கருத்துக்கள் இங்கு நினைவு கூறத்தக்கவை. எனவே, பெயர் மாறினுலும் சரி; வழிபாட்டு முறைகள் மாறினுலும்சரி; அவற்றைப் பற்றிக் கவலைப்படாமல் பக்தியையும், இறையுணர்வையும் மேன்மேலும்வளர்த்து வந்தனர்.

கொற்றவை

கொற்றவை பெண் தெய்வம். தொல்காப்பியத்திலும், சங்க இலக்கியங்களிலும் கொற்றவை பற்றிப் பேசப்படுகிறது. இந்தியா முழுவதிலும் எல்லாத் தெய்வங்களையும் வழிபட்டாலும், ஒவ்வொரு மாநிலத்திலும் சில தெய்வங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்துச் சிறப்பாகப் பூஜித்து வருகிறார்கள். வங்காளத்தில் துர்க்கா தேவிக்கு முதலிடம் கொடுத்து, அம்பிகை வழிபாடு நடத்தி வருவதை நாம் காணலாம்.

கொற்றவை தெய்வம் திராவிடரின் வெற்றித் தெய்வம் எனக் குறிப்பிடப்படுகின்ருள். இவள்

முருகப் பெருமானுடைய தெய்வம் எனவும் கூறப்படுகின்ருள்.

கொற்றவைக்கு வழிபாடு எவ்வாறு நடைபெற்றது? முருகப் பெருமானுக்கு நடைபெற்று வந்தது போலவே, வெறியாட்டுடன் நடைபெற்று வந்தது.

கொற்றவைக்குப் பலி கொடுத்து வாழ்த்தியதைக் "கொற்றவை நிலை" எனத் தொல்காப்பியம் கூறுகிறது. (தொல்காப்பியம்-பொருளதிகாரம்-நூற்பா-56).

"உருகெழு மரபின் அயிரை பரவியும்" [பதிற்றுப் பத்து] மரபுநிலை வழுவாது, அயிரை மலையில் உறைகின்ற கொற்றவைத் தெய்வத்தைச் சேர மன்னர் வழிபட்டு வந்தனர் என்ற செய்தி பதிற்றுப்பத்து நூலால் தெரிய வருகிறது.

"அஞ்சுவரும் மரபில் கடவுள் அயிரையின் நிலை இ" (பதிற்றுப் பத்து) அச்சம் தருகின்ற முறைமையினை உடைய கொற்றவை உறைகின்ற அயிரைமலை என அதே பதிற்றுப் பத்து இயம்புகின்றது.

"விடர்முகை அடுக்கத்து விறல்கெழு சூலிக்குக் கடனும் பூணும்"-- [குறுந்தொகை: 218.] பிளவுகள், குகைகள் இவற்றையுடைய மலைச் சாரலில் எழுந்தருளியுள்ள, வெற்றி நிரம்பிய திரிசூலத்தைக் கையிலே கொண்ட கொற்றவைக்குப் பலிக்கடனை நிறைவேற்றுதல் பற்றிக் குறுந்தொகை குறிப்பிடுகின்றது.

ஆறுவகைச் சமயங்களாக இந்து சமயத்தைப் பாகுபாடு செய்து ஆன்றேர்கள் கூறியிருக்கிருர்கள். சிவனை முழுமுதல் கடவுளாக ஏற்றுக்கொண்டு வழிபடுகின்ற சமயம் சைவம். விஷ்ணுவைத் தலைமையாக ஏற்றுப் போற்றுகின்ற சமயம் வைணவம். சக்தியை முழுமுதல் தெய்வமாகக் கொண்டது சாக்தம். கணபதியைக் கடவுளாகக் கொண்டது கானபத்தியம். குமரனைக் கடவுளாகக் கொண்டது கௌமாரம். சூரியனைக் கடவுளாகக் கொண்டது சௌரம். இவை பிற்காலத்தில் ஏற்படுத்தப்பட்டவை. இவ்வறுவகைச் சமயங்களுள் ஒன்ருகச் சக்தியைப் போற்றும் சாக்தம் குறிப்பிட்டிருப்பது கவனிக்கத் தக்கது.

இந்தியாவில் சக்தி பீடங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இவை சக்தியின் பெருமையை நினைவூட்டுகின்றன. சிவஸ்தலங்களாக இருந்தாலும் அம்பிகைக்குப் பிரதானம் கொடுக்கக் கூடிய ஸ்தலங்களும் உண்டு. தனியே சக்தி தெய்வத்துக்கு ஆலயம் நிர்மாணம் செய்யப்பட்டிருப்பதையும் நாம் அறிகிருேம்.

சைவ சித்தாந்தத்தில் சக்திக்குப் பிரதான இடம் உண்டு. இறைவன் அம்மையும் அப்பனுமாகக் காட்சியளிக்கிருன் என்பது சைவ சித்தாந்தக் கொள்கை. சிவபிரான் தன் செயல் அனைத்தையும் சக்தியின் மூலமாகத் தான் செயற்படுத்துகின்ருன். அதாவது சிவ பெருமான் திருக்கருணைத் திறன் சக்தியின் மூலமாகப் பரிணமிக்கிறது. "சக்தியில்லா விட்டால் சிவனே என்றிரு" என்று சொல்லுவதையும் நாம் கேள்விப்பட்டிருக்கிருேம். சிவபிரான் பஞ்ச கிருத்தியங்களாகிய ஐந்தொழில் செய்வதற்குத் துணைக் காரணமாய் இலங்குபவள் சக்தி.

உமையம்மையே கோபவேளையில் காளி எனப்படுகிருள். போர் முனையில் போர் செய்யும்போது துர்க்கை எனப்படுகிருள். ஆன்மாக்களாகிய அடியார்களுக்கு எல்லா ஐசுவர்ய போக போக்கியங்களை வழங்கும் போது பவானி எனப் போற்றப்படுகிருள். புருஷரூபமான வேளையில் புருஷோத்தமன் எனப்படுகிருள்.

கொற்றவையின் அருள் வடிவங்களாக மகாமாயை, மகிஷாசுரமர்த்தனி, காளி, சாமுண்டி, சண்டிகாதேவி, சியாமளாதேவி, சிவதூதி ஆகியவை சொல்லப்படுகின்றன.

காளிதாசர், காளமேகப் புலவர், குமரகுருபரர், அபிராமிப்பட்டர், சத்திரபதி வீரசிவாஜி, இராமகிருஷ்ண பரமஹம்ஸர் ஆகியோர் அம்பிகையின் திருவருள் பெற்றவர்கள் ஆவார்கள். இன்றும் நம்மில் பலர் தேவி உபாசகர்களாக விளங்குவதை நாம் பார்க்கலாம். கவிராஜ பண்டிதர் என்பவர் சௌந்தர்யலகரியைப் பாடி தேவி அனுக்ரஹம் பெற்ருர்.

இறைவனுக்கு அடுத்தபடியாக நமக்கு உறுதுணையாக அமைந்திருப்பது மழை. மாரி என்ற சொல் மழையைக் குறிக்கும். மாரி என்ற மழையைப் போற்றி வந்தநிலை காலப்போக்கில் மாரியம்மன் தெய்வமாக மாறி, மாரியம்மன் வழிபாடாக வடிவெடுத்தது.

கொற்றவை என்ற வெற்றித் தெய்வமாக இருந்து அவள் அனைவராலும் வழிபாடு செய்யப்பெற்ருள் சங்க காலத்தில். காலப்போக்கில் அவளே சிறு தெய்வம் பெருந் தெய்வம் எனப் பிரிக்கப்பட்டாள். மாரியம்மன், காளியம்மன், எல்லையம்மன், திருநெல்வேலி மாவட்டத்தில் இசக்கி அம்மன், முப்பிடாரி அம்மன், கேரளாவில் பகவதி அம்மன் எனப் பல்வேறு பெயர்களை அம்பிகை பெற்ருள். சிறு தெய்வமாகவும், காவல் தெய்வமாகவும் ஆக்கப் பெற்ருள்.

இன்றும் சிற்றூர்களிலே எல்லையில் அம்மன் கோயில்கள் அமைந்திருப்பதைக் காணலாம்.

வைதிக சமயக் கலப்பிற்குப் பிறகு பெருந் தெய்வமாக, சக்தியாக, உமாதேவியாக அம்பிகை ஆனுள். சிவன் கோவில்களிலே சிவனேடு சேர்ந்து பெருந்தெய்வம் ஆனுள்.

சிந்து வெளி நாகரிகத்தில் மூன்றுகண் உடையபெண்தெய்வ உருவம் ஒன்று கிடைத்ததாக வரலாற்று ஆசிரியர் ஒருவர் குறிப்பிடுகின்ருர்.

ஹரப்பாவில் கண்டெடுக்கப்பட்ட புதை பொருள்களில் இருந்து, அங்கும் தாய் வழிபாடும், தாய்த் தெய்வ வழிபாடும் இருந்தனவாகத் தெரிகிறது.

வங்காளத்தில் துர்க்கை வழிபாடு பிரசித்தமானது என்பதை அறிவோம். துர்க்கை-காளி-கொற்றவை- தமிழ் நூல்களில் சொல்லப்பட்ட கொற்றவையே ஆவாள். காளிகோட்டம்-காளி கோயில். காளி கோட்டம் என்பது திரிந்து கல்கத்தா என வழங்கப்படுகிறது. கரியகாளி என்ற பொருளில் காளிதேவியைக் கல்கத்தாவில் வழங்குகிருர்கள். கரியகாளி கரியாளி என மருவியது. வங்கப் பெண்களுக்குக் கரியாளி என்ற பெயர் இடப்படுவதை இன்றும் காணலாம்.

தமிழர் எந்தக் காலத்தில் தோற்றத்திற்கு வந்தார்களோ அன்று முதல் தாயின் பெருமையை உணர்ந்து, அவளின் தலைமையை ஏற்றவர்கள் ஆவார்கள். தாய்வழிச் சொத்துரிமையைப் பெற்றிருக்கிருர்கள்.

உலகில் ஏனைய மக்களிடையே இறைவன் ஆண்பால் உருவில் வழிபடப்பட்டு வந்திருக்கிருன். ஆனல், தமிழர், எகிப்தியர், இலெமூரியர், சிந்துவெளித் தமிழர் ஆகியோரிடையே கடவுள் பெண்பாலாகத் தாய் உருவத்திலும் வழிபடப்பட்டு வந்தமையைக் காணலாம்.

பழந்தமிழர், மலையாளத்தார், பாலித்தீவு மக்கள், கிழக்கிந்தியத்தீவு மக்கள், இவர்களுக்கு இடையேயும் தாய்வழி உரிமை அமைந்தது.

தாய் என்பதிலிருந்துதான் தாயம் என்ற உரிமையைக் குறிக்கும் சொல் வந்தது. தாயம் என்பதிலிருந்து தாயபாகம் என்ற சொல் சட்ட நூலில் இடம் பெற்றுள்ளது நினைவுகூரத் தக்கது.

சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றகொற்றவை வழிபாட்டை இங்கே எடுத்துச் சொல்லுவதற்கும், இந்தச் செய்திகளுக்கும் என்ன சம்பந்தம் எனக்கேட்கலாம்.

சங்க இலக்கியத்தில் காணப்படுகின்ற கொற்றவை வழிபாடு காலப்போக்கில் உலகெங்கும் பரவி, எப்படி எல்லாம் மருவி வழங்கப்படுகிறது; அதற்கான ஆதாரங்களை எடுத்துக்காட்டுதல் ஆகிய எண்ணத்தில் இவை இங்கே எடுத்துக் காட்டப்பட்டன.

கொற்றவையாகிய தாய் வழிபாடே உலகம் முழுவதும் பரவி இருந்தது என்பதைச் சம்ஸ்கிருதச் சுலோகம் ஒன்று எவ்வாறு கூறுகிறது ? அதனைக் கீழே காண்போம்.

“மனித பாந்தவ்யங்கள் யாவற்றிலும் அன்னையின் பாந்தவ்யமே மிகப் புனிதமானது. ஆதலால், இந்தியாவில் சகுணப் பிரம்மத்தின் பாவனைகள் யாவற்றிலும் ஜகன்மாதாவினுடையதே மிகவும் மேலானதாகக் கருதப்படுகிறது. அன்னையின் அன்பைப் போல, இளகியதும், கவனத்தைக் கொண்டதும், பொறுமையைப் பெற்றதும், சகிப்புத் தன்மையை உடையதுமான அன்பு வேறு எதுவும் இல்லை. ஆதலால், கடவுள் நம் தாயாக ஆகிவிட்டால், வாழ்க்கையின் எல்லா நிலைமைகளிலும் நமக்கு ஒரு நிச்சயமான ஆதரவு ஏற்பட்டுவிடுகிறது. இதையறிந்த இந்துக்கள் பரமாத்மாவை அன்னையாகவே வழிபட விரும்புகின்றனர். அவருடைய பாதங்களில்தான் தங்களுடைய இன்பமான சுவைமிக்க பாடல்களைப்பாடி அர்ச்சிக்கின்றனர். எந்த உருவத்திலும் அவளைக் கண்டு வணங்குகின்றனர். நன்மை தீமை இரண்டும் அவளுடைய மகிமையின் ஆவிர்ப்பவமேயாகும். அவள் இல்லாத இடம் இல்லை.

உலகத்தில், ஒரு தாயின் சக்தி அவள் வீடுமுழுவதிலும் பரவி நிற்பதுபோல, உலக அன்னையினுடைய பெருமைமிகு ஆற்றல் அண்டம் அனைத்தும் நிறைந்துநிற்கிறது. ஆகவே நன்மை தீமை ஆகிய எந்த உருவத்தில் அவள் தோன்றினும் அன்புகொண்ட அன்னையாகவே அவளை வழிபடவேண்டும்.

**சங்க இலக்கியங்களில் திருமால்**

காக்கும் கடவுள் திருமால் ஆவார். அவரை மால் எனவும், விஷ்ணு எனவும், மகாவிஷ்ணு என அடைமொழி சேர்த்தும் சொல்லுகின்றோம்.

தமிழ்நாடு முழுதும் ஏன் இந்தியா முழுவதிலும் கூடத் திருமால் வழிபாடு நிறைந்திருந்தது; நிறைந்துள்ளது. இராஜபுதனத்திலும், உத்தரப் பிரதேசத்திலும் திருமால் வழிபாடு நிறைந்திருக்கக் காணலாம். குஜராத்திலும், கேரளத்திலும் திருமால் வழிபாடு பிரசித்தம்.

வேதங்கள் மிகவும் பழமையானவை எனச் சொல்லுகிறார்கள். அவ்வளவிற்குப் பழமை வாய்ந்தது திருமால் வழிபாடு. வைணவருடைய தத்துவ அமைதி இரண்டுவிதங்களில் வளர்ச்சியடைந்தது. ஒருவிதத் தத்துவ அமைதி வேதங்களில் காணப்படுவது. மற்றொருவிதத் தத்துவ அமைதி புராணங்களில் காணப்படுவது.

வேதங்களில் திருமாலாகிய விஷ்ணு சூரியனுடன் தொடர்பு உடைய ஒரு தெய்வமாகக் கூறப்படுகிறார். திருமால் ஆகிய அவரே இந்திரனுக்கு நண்பனாகவும் கருதப்படுகின்றார்.

பிற்காலத்தில் புராணங்கள் எழுந்தன. புராணங்களில் பல்வேறு வகைப்பட்ட கதைகள் கூறப்பட்டன. இறைவனாகிய பரம்பொருளை மூன்று அம்சங்கள் கொண்டவராகப் பிரித்தார்கள். பிரம்மன், விஷ்ணு, சிவன் என்ற மூவரே அவர்கள். படைத்தல் தொழிலைச் செய்பவன் பிரம்மன். காத்தல் தொழிலைச் செய்பவன் திருமாலாகிய விஷ்ணு. அழித்தல் தொழிலை ஆக்குபவன் சிவன். இவர்களைப் பற்றிய கதைகள் புராணங்களில் இடம்பெறலாயின. மந்திரம் ஜபித்தல், பலிகொடுத்தல், விழா நடத்துதல் ஆகியவைப்பற்றிய செய்திகளும் புராணங்களில் இடம்பெற்றன.

இதிகாசங்களில் கண்ணனும் இடம்பெற்றுள்ளதை அறியலாம். கண்ணன் திருமாலின் ஓர் அவதாரம். தமிழ்நாட்டில் முல்லை நிலத் தெய்வமாகக் கூறப்படுபவன் மாயோன். அம்மாயோனே விஷ்ணுவாகவும், கண்ணனாகவும் காட்சி தருகிறான். மால், மாயோன் என்பன அவனைக்குறிக்கும் தமிழ்ப் பெயர்கள். விஷ்ணு என்னும் பெயர் பழைய நூல்களிலே இல்லை.

மால் என்ற சொல்லுக்குப் பெரியவன் என்பது பொருள். மாயோன் என்னும் சொல்லுக்குக் கரியவன் என்பது பொருள். சங்க இலக்கியங்களுள் ஒன்றான முல்லைப்பாட்டில் "மால்" என்ற சொல் காணப்படுகிறது. மற்றொரு சங்க இலக்கிய நூலான மதுரைக்காஞ்சியில், "மாயோன்" என்னும் சொல் காணப்படுகிறது. மால், மாயோன் என்னும் சொற்கள் திருமாலைக் குறிப்பன ஆகும்.

" மண்ணுறு திருமணி புரையும் மேனி
விண்உயர் புள்கொடி விறல்வெய் யோன் "

— கழுவப்பட்ட அழகான நீலமேனி போன்ற திருமேனியையும், வான் அளவு உயர்ந்த கருடக்கொடியையும் உடையவன் திருமால் — எனப் புறநானூறு (56) கூறுகிறது. " நீல்நிற உருவின் நேமியோன்" — நீலநிறம் பொருந்திய உருவங்கொண்ட தனது கரத்தில் சக்கரத்தை ஏந்தியுள்ளான் (புறநானூறு-58)எனவும் சங்க இலக்கியம் புறநானூறு கூறுகிறது.

" நனந்தலை உலகம் வளைஇ நேமியொடு
வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை
நீர்செல நிமிர்ந்த மாஅல் "

— திருமால் தன்னுடைய கரங்களிலே சுதர்சன் என்ற சக்ராயுதத்தை ஏந்தியுள்ளான். பாஞ்சசன்னியம் என்ற வலம்புரிச் சங்கையும் ஏந்தியுள்ளான். மாவலி மன்னன் (மகாபலிச் சக்ரவர்த்தி) மூன்றடி நிலத்தைத் தனக்கு வழங்கும்போது, அம்மன்னன் தாரை வார்த்துக் கொடுக்கும்போது பூமிக்கும் ஆகாயத்துக்குமாகப் பேர் உருவம் எடுத்தவன் என்றெல்லாம் திருமாலைப் பற்றிய செய்திகள் சங்க இலக்கியங்களுள் ஒன்றான முல்லைப்பாட்டில் சொல்லப்படுகின்றன. திருமால் வாமன அவதாரத்தில் ஓரடியால் மண்ணுலகையும், இரண்டாவது அடியால் விண்ணுலகையும் அளந்தார். மூன்றாவது அடியை மகாபலிச்சக்ரவர்த்தியின் தலையில் வைத்து அவன் செருக்கை அழித்தார். இது புராண வரலாறு.

# வட இந்திய யாத்திரை

( சுவாமி அசலானந்தர் )

1978ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் பத்தாம் தேதிமுதல் ஐம்பதுபேர் அடங்கிய யாத்திரைக் குழு ஒன்று வடநாட்டு யாத்திரை புறப்பட்டது. அந்த யாத்திரையில் இருபத்தைந்து அன்பர்களும், இருபத்தைந்து தாய்மார்களும் பங்கு கொண்டனர்.

பாரதத்தில் அமைந்துள்ள பன்னிரண்டு ஜோதிர் லிங்கங்களையும், துவாரகை எனப் படும் ஐந்து புண்ணிய க்ஷேத்திரங்களையும், மற்றும் பல்வேறு புண்ணிய க்ஷேத்திரங்களையும், நதிகளையும் தரிசிப்பது எங்கள் திட்டமாகும்.

1978ஆம் வருஷம் ஆகஸ்டு மாதம் 10ஆம் தேதியன்று சென்னையில் அமைந்துள்ள 'தாஸ பிரகாஷ்' ஹோட்டலுக்கு எதிரிலுள்ள 'தர்ம பிரகாஷ்' என்ற பெரிய கட்டடத்தின் ஓர் அறையில் காலை 10 மணிக்கு யாத்திரை வாசிகளான ஐம்பதுபேரும், மற்றும் வழியனுப்ப வந்திருந்த சிலரும் ஒன்றுகூடி ஐக்கிய வணக்கம் நடத்தினோம்.

சான்றோர்களின் ஆசியைப் பெறாது எத் திட்டமும் நிறைவுபெறாது. ஆதலின் முன் கூட்டியே ஸ்ரீமத் சித்பவானந்த சுவாமிஜி, ஸ்ரீமத் சாந்தானந்த சுவாமிஜி ஆகியோரின் ஆசியுரைகளைப் பெற்றிருந்தோம். அவ் ஆசியுரைகளாவன.

ஸ்ரீமத் சித்பவானந்தர் அவர்களின் ஆசியுரை

ஆத்ம சாதனங்களுள் மிக முக்கியமானதாக இருப்பது தீர்த்த யாத்திரை. தீர்த்த யாத்திரை போவது மிகப் பழங்காலம் தொட்டு இன்று பரியந்தம் நம் நாட்டில் இருந்து வருகின்ற ஆத்ம சாதனங்களுள் அருமையான ஒன்றாகும். தீர்த்தயாத்திரை போவதின் மூலமாக ஆத்மபரிபாகம் நாம் அடைந்து வருவது தெற்றென நமக்கு விளங்கும். ஆங்காங்கு பெரியோர்கள் வாழ்ந்திருந்த புனிதமான இடங்கள், சான்றோர்கள் தபசுபுரிந்த இடங்கள் தெய்வீக நிகழ்ச்சிகள் நிகழ்ந்த ஸ்தலங்கள் ஆகிய இடங்களுக்கு யாத்திரை செல்கின்றோம். அத்தகைய புனிதமான க்ஷேத்திரங்கள் மறைமுகமாக அருள் நிறைந்து இருக்கின்றன. நாம் யாத்திரை போகும்பொழுது எவ்வளவுக்கெவ்வளவு பக்குவப்பட்டிருக்கின்றோமோ அவ்வளவுக்கவ்வளவு அந்தந்த இடங்களில் உள்ள அருள்நிலையோடு மானசீகமாக இணக்கம் கொள்வது சாத்தியமாகின்றது. மற்றொரு சிறந்த பகுதி இந்த யாத்திரையில் அமைகிறது. ஆதியோடு அந்தமாகப் பிரயாணம் வசதி நிறைந்ததாக இருக்கும் என்று எதிர்பார்க்கலாகாது. நாம் நவீனமான வசதிகள் எவ்வளவுதான் செய்து கொண்டாலும் எதிர்பாராது சில இடங்களில் கஷ்டம் ஏற்படும், நெருக்கடி ஏற்படும். அமைதியாக, சாந்தமாக கஷ்டங்களை ஏற்றுக் கொள்வது நல்ல ஆத்ம சாதனம் ஆகிறது. सहोऽस सहो मयि धेहि என்பது பிரார்த்தனைகளில் ஒன்று. சகிப்புத் தன்மையே வடிவெடுத்திருப்பவனாக இறைவா நீ இருக்கின்றாய். சகிப்புத்தன்மையை எனக்குத் தந்து அருள்வாயாக. கஷ்ட தசைகளில் மனம் சஞ்சலப்படாது இருப்பது சிறந்த தபசு ஆகிறது. எவ்வளவுக்கெவ்வளவு அமைதியாக அத்தகைய நெருக்கடியான சம்பவங்களை ஏற்றுக்கொள்கின்றோமோ அதற்கேற்றளவு நாம் ஆத்ம பரிபாகம் அடைகின்றோம். ஒவ்வொரு இடத்திலும் அமைதியாகத் தியானம் பண்ணுவது முற்றிலும் அவசியமாகிறது. தியானவஸ்தையில் இருக்கின்ற பொழுதுதான் அந்த இடத்தில் உள்ள அருள்நிலை நம்முடைய உள்ளத்தை வந்து தாக்கும். பஜனை பண்ணுதல், தியானம் பண்ணுதல், பரஸ்பரம் ஒருவருக்கொருவர் உதவி செய்தல், பிறரிடம் இருந்து வரும் இன்னல்களைப் பொருட்படுத்தாது இருத்தல் ஆகியவற்றின் மூலம் மனபரிபாகம் பெறும் அளவு யாத்திரை பெரும் நலன் விளைவிப்பது ஆகும். பிறகு அந்தந்தப் பகுதியைப்பற்றித் திரும்பத் திரும்பச் சிந்தனை பண்ணுகின்றபொழுது நாம் சிந்தனை பண்ணுவதற்கு ஏற்ப அந்த ஸ்தல மகிமை உள்ளத்தில் பதிகின்றது. பதிவு பெற்று இருக்கின்ற அந்தச் சம்ஸ்காரங்களைத் திரும்பத் திரும்ப மனனம் பண்ணுவது ஒரு சிறந்த ஆத்ம சாதனம் ஆகிறது. ஆதலால் மானுட வாழ்க்கையில் வாய்ப்பதற்கரிய பெரிய வாய்ப்பாக இருக்கின்ற தீர்த்த யாத்திரையை

எப்பொழுதோ ஒருதடவையாவது வாழ்க்கையில் கடைப்பிடிக்கவேண்டும். மனபரிபாகத்துடன் அதைக் கடைப்பிடிப்பதற்கு ஏற்ப நாம் இறைவனுடைய அருளுக்குப் பாத்திரமாகின்ரேம். நல்ல மனப்பான்மையோடு தெய்வத்தை முற்றிலும் நம்பி இருக்கும் மனப்பான்மையோடு தெய்வ பக்தியை வளர்ப்பதற்காகவே சங்கல்பம் செய்துகொண்டு இந்த யாத்திரையில் நீங்கள் எல்லாரும் ஈடுபடுவீர்களாக. இறைவனுடைய அருள் சதா துணைபுரிவதாகுக. ஆங்காங்கு நலன் வாய்க்கின்றவிடத்தும், பொலன் வாய்க்கின்றவிடத்தும் அவை யாவும் இறைவனுடைய திருவருள் என்று சமாதான மனப்பான்மையுடன் ஏற்றுக்கொண்டு நல்ல பயிற்சியைப் பெற்று, பக்தியை வளர்த்து ஆத்ம பரிபாகம் அடைவீர்களாக.

**ஸ்ரீமத் சாந்தானந்தர் அவர்களின் அருளுரை**

பாரத நாட்டுப் பண்பில் யாத்திரை ஒரு மிக முக்கியமானதாக இடம் பெற்றிருக்கின்றது. திருமணமாவதற்கு முன்பு பிரம்மச்சாரியாக இருக்கும் மாப்பிள்ளை காசியாத்திரை செய்து வந்த பின் திருமணம் செய்வது வழக்கம். உலக அனுபவம் பெறுவதற்கும், பற்றுதல் நீங்குதற்கும் இத்தகைய ஏற்பாடு நம் முன்னேர்கள் செய்து வைத்திருந்தார்கள். குரு தேவருடைய உபதேச மொழிகளில் ஒன்று வருமாறு: "பலாப்பழத்தை அரிய வேண்டுமாயின் முதலில் கையில் எண்ணெயைப் பூசிக்கொள்ள வேண்டும், இல்லாவிடில் பலாப்பழத்தில் உள்ள பசை கத்தியிலும், கையிலும் ஒட்டிக் கொண்டு தொல்லை கொடுக்கும்." திருமணம் செய்துகொள்ளப் போகும் மாப்பிள்ளை காசி யாத்திரை செய்து உலகஅனுபவமும், பக்தியும், நிறையப் பெற்றவனுக இருப்பானுகில் இல்லறம் நல்லறமாக விளங்கும். அப்படிப்பட்ட காசி யாத்திரையை இப்பொழுதும் ஒரு சடங்காக வைத்துத் திருமணம் செய்யப்படுகின்றது. வாழ்க்கையில் கிரஹஸ்த ஆஸ்ரமத்திற்குப் பிறகு வானப்பிரஸ்த ஆஸ்ரமத்தில் கணவனும் மனைவியுமாகச் சேர்ந்து காசியாத்திரை செல்கின்றனர். அப்பொழுது அவர்கள் உள்ளம் பக்குவப்பட்டிருக்கின்றது. ஆங்காங்குச் செல்லும் க்ஷேத்திரங்களில் இருக்கும் அருள் நிலையை உணருவதற்கு வாய்ப்பாக அமைகின்றது. ஆதலால் உங்களுடைய பக்குவத்திற்கு ஏற்ப நீங்கள் செல்லும் க்ஷேத்திரங்களில் இருக்கும் அருள் நிலையை உணருவீர்கள். ஸ்ரீ ராம கிருஷ்ண பரமஹம்சர் க்ஷேத்திரங்களுக்குச் செல்லும் போது ஆங்காங்கு உள்ள அருள் நிலைக்கு ஏற்ப சமாதிநிலை அடைந்து வந்தார். ஆக நீங்கள் இப்பொழுது வட இந்திய யாத்திரை செல்லுவதற்குத் தயாராக இருக்கின்றீர்கள். ஒரு பொருள்தான் இத்தனை சொரூபங்களாக விளங்குகின்றது. இத்தனை சொரூபங்களாக விளங்கும் பரம்பொருளின் அருளால் உங்கள் யாத்திரை இனிது நிறைவேறுவது ஆகுக. இறைவனது அருள் சதா இருந்துகொண்டிருப்பதற்கிடையில் நாம் செய்ய வேண்டிய காரியங்கள் சில இருக்கின்றன. அப்பொழுதுதான் யாத்திரை இனிது நிறைவேறுகின்றது. அதில் முதலாவதாக நாம் அருள் நாட்டம் கொண்டவர்களாக இருக்க வேண்டும். சதா பிரார்த்தனை மயமாக நம் மனது இருக்க வேண்டும். ராமன் உள்ள இடத்தில் காமன் இல்லை, காமன் உள்ள இடத்தில் ராமன் இல்லை. அருள் நாட்டமே குடிகொண்டிருக்கும் மனதில் வேறு சிந்தனைக்கு இடமே இருக்காது. இன்று பிற்பகலில் நீங்கள் ரயில் ஏறப் போகின்றீர்கள். உங்களை வழி அனுப்புவதற்குச் சிலர் வந்து இருப்பார்கள். ரயில் நகர்ந்த பிறகு வீட்டு ஞாபகம், வீட்டில் உள்ளவர்களுடைய ஞாபகம், செய்துகொண்டிருந்த வியவகாரங்கள் அத்தனையையும் அடியோடு மறந்துவிடவேண்டும். உண்மையான அருள்நாட்டம் இருந்தால் அவையாவும் மறந்துபோம். மனம் ஒன்றை ஆழ்ந்து எண்ணுகையில் மற்றவை எல்லாம் பின்னணிக்குப் போய்விடுகின்றன. அதனல் தான் யாத்திரையில் சதா நாமஜபம், ஐக்கிய வணக்கம் உபந்நியாசம் இப்படிப்பட்ட விஷயங்களே இடம் பெற்றிருக்கின்றன. ஆகையால் அருள்நாட்டம் கொண்டதாக மனம் எப்பொழுதுமே இருக்கும். இரண்டாவது நிபந்தனை நம்மை மறந்து இருப்பது. நம்மை உடல் சொரூபமாகக் கருதிக்கொண்டு இருக்கின்ரேம். உடலுக்குரிய வசதியைத் தேடுகின்ரேம். இந்த இடத்தில் உட்கார்ந்தால் இன்னது நேர்ந்துவிடும்; கொஞ்சம் மேலே ஏறிப்படுத்தால் இந்தச் சிரமம் வரும்; ஜன்னல் ஓரமாக இருந்தால்

சளிபிடித்து விடும். இவை போன்ற எண்ணங்கள் எல்லாம் தோன்றுவது நம்மை உடல் மயமாகக் கருதுவதனல்தான். நம்மை மறந்த நிலே எப்படி ஏற்படும்? பிறர் நலன் கருதும் பொழுது நம்மை மறக்கின்ருேம். எவ்வளவுக் கெவ்வளவு மற்றவர்களுக்கு வேண்டிய வசதிகளேச் செய்து கொடுப்பதில் ஆர்வமாக இருக்கின்ருேமோ, பிறருக்கு உதவி செய்வதைப் பாக்கியமாகக் கருதுகின்ருேமோ அந்த அளவு நாம் நம்மை மறக்கின்ருேம். நம்மை மறக்கும்பொழுது நமக்குண்டான உடல் உபாதை நீங்குகின்றது. ஏற்கனவே 1970 ஆம் ஆண்டு யாத்திரையில் சென்றிருந்தபொழுது நான் இதைஅனுபவபூர்வமாகக் கண்டிருக்கின்றேன். அதை உணர்ந்தே இப்பொழுது சொல்லுகின்றேன். பிறர் நலனேக் கருதிப் பிறருக்கு நாம் எத்தகைய உதவி செய்யக்கூடும், எப்பொழுது சந்தர்ப்பம் ஏற்படும் என்று காத்துக்கொண்டிருந்தோமானல் நம் உடல் நிச்சயம் பாதிக்கப்படாது. நம் உடல் பாதிக்கப்படுமே என்று அஞ்சி அதற்கு வசதி தேட ஆரம்பித்தோமானல் அது பாதிக்கப்படுகின்றது. இந்த இரண்டையும் நீங்கள் சோதனேயாகச் செய்துபார்க்கலாம். ஆதலால் தங்நல மற்று நம்மை மறந்து பிறர்க்கு எந்தச் சந்தர்ப்பத்திலும் எந்த விதத்திலும் சேவை செய்யத் தயாராக இருப்பது இரண்டாவது அம்சமாக அமைகின்றது. மூன்ருவது அம்சம் நிறை மனது. நாம் பெரியோர்களே வரவேற்கும்பொழுது பூர்ண கும்பம் வைத்து வரவேற்கின்ருேம். பூர்ண கும்பம் வைத்து வழிபடுகின்ருேம். அதன் கருத்து என்ன? நிறை நிலேயில் இருக்கும் பொழுது குறைவே கிடையாது. நம்முடைய மனதில் பூர்ண கும்பம் இருக்குமானல் வேறு குறை நேர்வதற்கு இடமே இல்லே. யார் மனதில் குறை இருக்கின்றதோ அந்தக் குறை நிலேயை மற்றவர்களாலும் நிவர்த்தி செய்ய இயலாது. யார் நிறை மனது உள்ளவர்களாக இருக்கின்ருர்களோ அவர்களுக்குத் திருவருள் பூர்ணமாக இருக்கின்றது. நாம் ஒரு கோவிலுக்குப் போய்த் தரிசனம்செய்கின்ருேம். அங்குப் பிறரிடத்தில் இருக்கும் குறையை நினேத்தோமானல் நாம் தரிசிக்கும் காட்சி நம் கண்ணில் படுவதில்லே. நாம் இந்த க்ஷேத்திரத்தில் இருக்கின்ருேம். இன்ன சொரூபத்தை வணங்குகின்ருேம் என்ற எண்ணமே போய் விடுகின்றது. அந்தக் குறைதான் நம் மனதில் இருக்கின்றது. அந்தக் குறையில்லாத நிலே மனதில் இருக்குமானல், மனதில் பூர்ண கும்பம் இருக்குமானல் நாம் காணும் தெய்வத்தின் காட்சி நம் மனதில் ஆழ்ந்து பதியும். நாம் யாத்திரையினின்று திரும்பி வந்த பிறகு தியானத்தில் அமர்ந்து இன்ன க்ஷேத்திரத்தில் இந்த மூர்த்தியைத் தரிசித்தோம் என்று கருதினல் உடனே நம் மனது அந்த க்ஷேத்திரத்தில் அந்த மூர்த்தியின் முன்னல் போய் நிற்கின்றது. அப்படி ஆழ்ந்த பதிவு நம்முடைய மனதிற்கு வர வேண்டுமாயின் நம் மனதில் குறைநிலே இருக்கலாகாது. பூர்ண கும்பம் வைத்தது போன்று மனம் பரிபூரணமாக இருக்கவேண்டும். இது மூன்ருவது நியதி. எழுபத்தைந்து நாட்கள் நீங்கள் யாத்திரை செய்யப்போகின்றீர்கள். இந்த மூன்று நிபந்தனேகளேயும் நீங்கள்சரியாக நிறைவேற்றுவீர்களானல் எழுபத்தைந்து நாட்கள் செய்யும் யாத்திரை அனுபவம் பல ஜன்மங்களில் பெறக்கூடிய அனுபவமாக வந்து அமையும். பிறருக்குச் சேவை செய்வதில் உடல் திருந்தியமைகின்றது. முன்பு யார் யாருக்கு என்ன உடல் உபாதைகள் இருந்தனவோ, அவையெல்லாம் மறைவதைக் காணலாம். ஆரோக்கியம் பெற்றவர்களாக இருப்பீர்கள். இடைவிடாது பிரார்த்தனேயில் ஈடுபட்டு இருப்பதால் மனதினுடைய இயல்புமாறி அமைகின்றது. எப்பொழுதுமே நீங்கள் அருள் நாட்டம் உடையவர்களாக இருப்பீர்கள். இவை அடியேனுடைய அனுபவத்தில் கிடைத்த உண்மை. ஆதலால் நீங்கள் தயவு செய்து அருள் நாட்டம் படைத்தவர்களாக, மனதில் பூர்ண கும்பம் வைத்தவர்களாக, மற்றவர்களுக்குச் சேவை செய்வதையே குறிக்கோளாகக் கொண்டுள்ளவர்களாக யாத்திரை செய்யுங்கள். உங்களுடைய யாத்திரை வெற்றிகரமாக நிறைவேறும். உங்களுடைய யாத்திரை இனிது துவங்குகின்றது. இனிது நடைபெற்று நல்ல விதமாக, உடலும், மனமும் புதுப்பிக்கப் பெற்றவர்களாக யாத்திரையின் முடிவில் நீங்கள் யாவரும் வந்து சேரவேண்டும் என்று எல்லாம் வல்ல பரம்பொருளே வேண்டிக் கொள்கின்றேன்.

(தொடரும்)

# பொங்கலெம் பாவை வாழி!

( புலவர் க. தில்லைக்கோவிந்தன் )

பொங்கலெம் பாவை வாழி ! வாழிய புவன மெங்கும்
மங்கல வளமை யூட்டும் மங்கைநீ, மாந்த ரெல்லாம்
அங்கையங் கனிய(து)என்ன ஆன்மிக ஞானமெய்திக்
கங்கைசேர் சடையான் பாதங் கலந்திட மகிழ்ந்து வாழி !

அவரவர் உண்மைத் தோற்றம் அறிந்ததில் ஆழ்ந்து நிற்கும்
தவநிலை கூட்டுந் தையல் ! தைம்மதிப் பொங்கற் பாவை !
உவரினுல் அமைந்த பொம்மை உவர்க்கடல் கரைவ தொப்ப
அவனருள் அளவில் தோற்றம் அவனுளே ஒடுங்க வாழி !

சாத்திரங் கல்லார், தக்க சாத்திரந் தாமே ஆக
மாத்திரைப் பொழுதுஞ் சிந்தை மற்றதிற் சார்த லின்றி
ஏத்திடுங் குருதேவ், எந்தச் சமயமும் ஏற்கும் மூர்த்தி,
காத்திடுங் கருணை வள்ளல் காட்சிதந் தருள வாழி !

சாரதை ராமகிருஷ்ணர் தாங்கிய ஆன்ம வாழ்வின்
சீரதை நினைவு கொள்ளுந் தெய்விகப் பொங்கற் பாவை !
ஊரதைச் சார ஆங்கே உளபல வழிகள் போலப்
பேறதை ஒன்றே என்னும் பெரும்பெயர்ச் சமயம் வாழி !

அன்னையார் குருதேவ் தந்த ஆன்மிகச் செல்வந் தன்னை
முன்னைநாள் உலகுக்(கு) ஈந்த முனிவனும் விவேகானந்தன்;
பின்னைநம் பிறப்பு நீக்கும் பேரரு ளாளர் மூவர்
பொன்னடி போற்றி வாழி ! வாழிய பொங்கற் பாவை !

---

# செய்திகள்

**நிகழ்ப்பவை**

*17—1—79* புதன்கிழமை யன்று மதுரை ஜில்லா தேனியில் **ஸ்ரீமத் நித்தியானந்த சுவாமிகள்** ஒருநாள் அந்தர்யோகம் நடாத்துவார்கள்.

*20—1—79* சனிக்கிழமை யன்று ஸ்ரீ விவேகானந்தர் ஜயந்தி ஆகும். அன்று குருகுலப் பத்தாம் வகுப்பு மாணவர்கள் பகல் பன்னிரண்டு மணி நேரம் அகண்ட நாமபஜனையும் நண்பகல் ஒரு மணி நேரம் ஐக்கிய வணக்கமும் செய்வார்கள்.

*23—1—79* செவ்வாய்க்கிழமை யன்று ராமநாதபுரம் தாயுமான சுவாமி சமாதிக் கோவிலில் நடக்கும் குருபூஜை விழாவில் **ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்** கலந்துகொள்வார்கள்.

*25—1—79* அன்று பொங்கல் விடுமுறைக்குப் பின் ஸ்ரீ விவேகானந்த வித்யாவன குருகுலப் பள்ளி திறக்கப்படுகிறது.

ஜனவரி மாதம் 26ஆம் தேதி வெள்ளிக்கிழமையன்று கோவை ஜில்லா பள்ளபாளையத்தில் நடக்கும் ஸ்ரீ ராமகிருஷ்ண ஜயந்தி விழாவில் **ஸ்ரீமத் நித்தியானந்த சுவாமிகள்** சொற்பொழிவாற்றுவார்கள்.

*29—1—79* திங்கட்கிழமை யன்று முற்பகலில் வடஆற்காடு ஜில்லா ஆரணியிலுள்ள ஸ்ரீசுப்பிரமணிய சாஸ்திரியார் உயர்நிலைப் பள்ளியிலும், ஆரணிக்கோட்டை அரசினர் ஆண்கள் உயர்நிலைப் பள்ளியிலும், அன்று பிற்பகலில் அரசினர் பெண்கள் உயர்நிலைப் பள்ளியிலும் **ஸ்ரீமத் நித்தியானந்த சுவாமிகள்** அறவுரை நிகழ்த்துவார்கள்.

---

# ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்

## இயற்றிய நூல்கள்

| | |
|---|---|
| திருவாசகம்-மூன்றும் பதிப்பு பிரசார விலை | ரூ. 14-00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை-பனிரண்டாம் பதிப்பு பிரசார விலை | ... 12-00 |
| ஞானயோக விளக்கம் | ... 8-00 |
| ராஜயோக விளக்கம் | ... 8-00 |
| கர்மயோக விளக்கம் | ... 7-00 |
| பக்தியோக விளக்கம் | ... 6-00 |
| பரமஹம்சரின் பெருமை | ... 6-00 |
| விவேகானந்த விவரணம் | ... 4-00 |
| ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் | ... 4-00 |
| விவேகானந்த உபநிஷதம் | ... 4-00 |
| கடவுளின் வடிவங்கள் | ... 4-00 |
| சந்தேகம் தெளிதல் பாகம்-I | ... 3-50 |
| சந்தேகம் தெளிதல் பாகம்-II | ... 3-50 |
| அனுஷ்டான வேதாந்தம் | ... 3-00 |
| எதிர்கால இந்தியா | ... 3-00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேச மஞ்ஜரீ ஆறும் பதிப்பு-பிரசார விலை | ... 2-75 |
| தினசரி தியானம்-பதினன்காம் பதிப்பு (பிளாஸ்டிக் உறையுடன்) பிரசாரவிலை | ... 2-75 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் சரிதம் | ... 2-00 |
| தேவரகசியம் (முதலிய கதைகள்) | ... 2-00 |
| ஸ்ரீ சாரதா தேவியாரது சரிதம் | ... 2-00 |
| கண்ணன் என்னும் கடவுள் | ... 2-00 |
| தாயுமானவர் இயற்றிய | |
| பரிபூரணானந்தம் விரிவுரை | ... 3-00 |
| சின்மயானந்த குரு ஷை | ... 3-00 |
| ஆனந்தமானபரம் ஷை | ... 3-00 |
| சுகவாரி ஷை | ... 3-00 |
| மௌனகுரு வணக்கம் ஷை | ... 3-00 |
| எங்கும் நிறைகின்றபொருள் ஷை | ... 2-50 |
| கருணாகரக்கடவுள் ஷை | ... 2-00 |
| பரசிவ வணக்கம் ஷை | ... 1-00 |
| விரதவீரர் பீஷ்மர் (நாடகம்) | ... 1-50 |
| பஜனைப் பாடல்கள் | ... 1-50 |
| சந்நியாசி | ... 1-25 |
| குழந்தைகளின் களிக்கூடம் | ... 1-00 |
| இராவண தத்துவம் | ... 1-00 |
| சகோதரி நிவேதிதை | ... 1-00 |
| ஹரிச்சந்திரன் (நாடகம்) | ... 1-00 |
| காயத்ரீ | ... 1-00 |
| வாலிமோக்ஷம் (நாடகம்) | ... 1-00 |
| தவப்புதல்வர்கள் (நாடகம்) | ... 1-00 |
| ஏகலைவ்யனின் குருபக்தி (நாடகம்) | ... 1-00 |
| தானவீரன் கர்ணன் | ... 1-00 |
| பார்வதி,லக்ஷ்மி,சரஸ்வதி கர்வபங்கம் | ரூ. 1-00 |
| நோய்க்கு இடம் கொடேல் | ... 0-80 |
| நன்மக்களைப் பெறுதல் | ... 0-80 |
| பாண்டவ கௌரவ பெருமை (நாடகம்) | ... 0-80 |
| ஆத்ம சக்தி | ... 0-75 |
| பாதுகா பட்டாபிஷேகம் (நாடகம்) | ... 0-75 |
| இறை வணக்கம் | ... 0-75 |
| செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா? | ... 0-75 |
| *மனிதனது நிஜசொரூபம் | ... 0-70 |
| *சக்தி தத்துவம் | ... 0-70 |
| *சிவ தத்துவம் | ... 0-70 |
| பிரஹ்லாதன் (நாடகம்) | ... 0-65 |
| *ஈசன் எங்கும் நிறைந்துள்ளான் | ... 0-60 |
| இந்து மதமும் கிறிஸ்துவ மதமும் | ... 0-60 |
| *ஆலய வழிபாடு | ... 0-60 |
| *சூரிய நாராயணன் | ... 0-50 |
| *முருகக் கடவுள் | ... 0-50 |
| *விஷ்ணு தத்துவம் | ... 0-50 |
| தெய்விக மகிமைகள் | ... 0-50 |
| சைவன் யார்? | ... 0-50 |
| கர்மகாண்டம் எது? ஞானகாண்டம் எது? | ... 0-50 |
| மார்க்கண்டேயன் (நாடகம்) | ... 0-40 |
| தபோபலன் (நாடகம்) | ... 0-40 |
| *கணபதி | ... 0-40 |
| நன்னெறிகளும் அருள்வாக்குகளும் | ... 0-40 |
| வர்ணாச்ரம தர்மம் | ... 0-30 |
| அருள் விருந்து 1 to 25 ஒவ்வொன்றும் | ... 0-30 |
| The Bhagavad Gita (9th Imp.) | ... 15-00 |
| The Indian National Education | ... 8-00 |
| Sri Lalithambika Sahasranama Stotram | ... 8-00 |
| Ramakrishna Lives Vedanta | ... 8-00 |
| Facets of Brahman or The Hindu Gods | ... 5-00 |
| Daily Divine Digest (DELUXE) | ... 4-50 |
| Daily Divine Digest Ordinary | ... 2-50 |
| Mahabharata (with plastic cover) | ... 4-50 |
| Ramayana (do) | ... 4-00 |
| Sri Vishnu Sahasranama Stotram | ... 4-00 |
| The Bhagavad Gita (Small Size) (With plastic cover) | ... 3-00 |
| Holy Bible—In the Light of Vedanta | ... 1-50 |
| *Introducing the Gita | ... 1-50 |
| *Key to Higher Life | ... 0-75 |
| *The Teacher | ... 0-60 |
| *The Student | ... 0-45 |

தேவையான புத்தகங்களுக்கு உரிய விலையுடன் தபால் கட்டணத்திற்காக ஸ்ரீமத் பகவத்கீதைக்கு ரூ. 3-25ம் மஞ்ஜரீக்கு ரூ. 2-65ம் தினசரி தியானத்திற்கு ரூ. 2-40ம் மற்ற வெளியீடுகளுக்கு ரூ. 2-50 முதல் 3-50 வரை சேர்த்து அனுப்புங்கள்.

*இக்குறியிட்ட புத்தகங்கள் ஏனைய பெரிய புத்தகங்களில் அடங்கியுள்ளன.

Edited by SWAMI NITHYANANDA,

Printed & Published by Swami Sankarananda at Tapovanam Printing School, Tirupparaitturai, Tiruchi Dt.